84

உ

ஸ்ரீ பரப் பிரஹ்மனே நம :

# ஆத்ம சாதகன் ஆரம்ப விசாரணை

## (நாநா ஜீவ வாதக் கட்டளை)

ஓம் ஷண்மத ஸ்தாபன சார்யாய நம:

ஓம் அத்வைத ஸ்தாபன சார்யாய நம:

ஓம் குரு பூமண்டலா சார்யாய நம:






முதல் 7—4—87 திருக்கடையூரில் மணிவிழா மலர்

2வது 9—6—88 J.K.K. சம்பூரணி குருபூஜையில் தசோபநிஷத்

3வது 9—6—89 J.K.K. சம்பூரணி குருபூஜையில் இம்மலர்

தாயிற் சிறந்ததோர் கோவிலுமில்லை
தந்தை சொல்மிக்க மந்திரமில்லை.
மருந்தாகித் தப்பா மரம்போல வாழும் திசை
நோக்கிச் சிந்தையால் வணங்குகின்றேன்.

**மனிதன் தெய்வமாகலாம், ஆத்மாவை உணர்வதால் மனிதன் தெய்வமே.**

நீர்த்துளிகளைப் போன்று ஜீவர்கள் பல சேர்ந்த நதிகளைப் போன்ற சமயங்கள் பிறக்குமிடம் பலவாகும்; எல்லா நதிகளும் நீர்த்துளிகளும் கலக்குமுடம் ஒன்றாய் கடலாகும்; எல்லா சமயங்களும் ஜீவர்களும் ஒரே கடவுளாகும்;



**திரு. R. T. பெருமாள் செட்டியார், திருமதி. P. ராஜம்மாள்,**
நூல், ஜமக்காள வியாபாரம், தேர்வீதி, பவானி - 638 301.
RTP இராமநாதன் பொதுமேலாளர், கொமாரபாளையம் பெற்றோர்

நெரூர் ஸ்ரீ கைலாச ஆஸ்ரம ஸ்தாபகரும்,
குமாரபாளையம் ஆனந்தாஸ்ரமம் போஷகருமாய் இருந்த
**ஸ்ரீலஸ்ரீ சதாசிவானந்த ஸ்வாமிகள்**





அவதாரம் கீலக ஸ்ரீ பங்குனி மீ 7உ 1908
மஹாசமாதி இரத்தாட்சி ஸ்ரீ மார்கழி மீ 20உ 1985

## மலர் தொகுத்து வெளியிடுவோர் முகவுரை :

அக்ஷய வருடம் பங்குனி மாதம் (1927) ஸ்ரீ ராமநவமி அன்று பவானியில் பிறந்து, கலைக்கல்லூரிக்குப் பின் நூற்பு தொழிற் கல்வி படித்து 34 வருடங்கள் பொதுமேலாளராக சேவை செய்து, ஓய்வு பெற்றுள்ளேன். பஞ்சு அதிகம் உற்பத்தியகும் குஜராத், மஹாராஷ்டிரம், பஞ்சாப், ஆந்திரப் பிரதேசம், ஹரியானு, கர்நாடகம், தமிழ்நாடு, ராஜஸ்தான், மத்தியப் பிரதேசம் பஞ்சு கொள்முதல் செய்ய பலமுறை எல்லா சீதோஷ்ணங்களிலும் செல்லும் வாய்ப்புப்பெற்றேன். தொழில் முன்னேற்றங்களை நேரில் கண்டறிய நானுகவே மேற்கு நாடுகளாகிய ரஷ்யா, ஜெர்மனி, செக்கோஸ்லவேக்யா, ஆஸ்திரியா, இத்தாலி, சுவிட்சர்லாந்து, பிரான்ஸ், இங்கிலாந்து நேரில் சென்றுள்ளேன். நெரூர் தவத்திரு சதாசிவானந்த ஸ்வாமிகள் ஸ்வாமி தோஜாமயானந்தா அவர்கள், கொமாரபாளையத்தில் ஸ்ரீலஸ்ரீ சோம. கோபால ஸ்வாமி அவர்கள் ஆகியோருன் சில வருட தொடர்பால் ஆத்மீகப் பற்று தூண்டி விடப்பட்டு; முதலில் 1987ல் 60ம் ஆண்டு மணிவிழா மலரும், 1988ல் இரண்டாவதாக தசோபநிஷத்தும், 1989ல் இம் மலரும் தொகுத்து வெளியிட்டு ஞானதானமாக சமர்ப்பிக்கின்றேன். பல படித்தரங்களாக உள்ள ஞான விளக்கங்களை குருமார்களிடம் முறைப்படி நேரில் அணுகிபெறலாம். குருவருளும், திருவருளும் பிராத்திக்கின்றேன். எது உண்மையில் உயர்ந்த நன்மையோ, அதைக்கூட்டி வைத்தருளுக.

இப்படிக்கு,

செய்கையில் கடமையும், உள்ளத்தில் அன்பும், எப்போதும் வேண்டும்.

**R. T. P. இராமநாதன்,** பொதுமேலாளர்,
436, சேலம் மெயின் ரோடு, கொமாரபாளையம் - 638 183.

இந்த மூலப் பிருகிருதியும் விகிர்த (வேறுபாடு) குணமாகிய முக்குணத்தோடு (சத்துவ ராஜஸ தாமஸ) கூடியிருக்கும். அந்தப் பிருகிருதியின் சத்துவ குணத்தை மாயை (வித்தை) யென்றும், சர்வக்ஞ வுபாதி யென்றும், ஈசுர காரண சரீர மென்றுஞ் சொல்லப்படும். இந்த மாயையினிடத்திலே நிர்மல சலப் பிரதிவிம்பம் போலப் பிரமம் சுலட்க்ஷணமாக (உள்ளது உள்ளபடி–சுத்த இலக்கணமாய்)ப் பிரதிவிம்பிக்கும். இந்தப் பிரதிவிம்ப சைதைந்யத்தைச் சர்வக்ஞனாகிய ஈசுர னென்றுச் சொல்லப்படும். இந்தச் சத்துவ குண மாயையினிடத்திலே, சத்துவத்தில் சத்துவம், சத்துவத்தில் ரஜஸ், சத்துவத்தில் தமஸ் என மூன்று குணங்களுண்டு. இவைகளில், சத்துவத்தில் சத்துவம் பிரதாநமாகும் போது, அதில் பிரதிவிம்பித்த ஈசுரன் சகத்தை இரக்ஷிக்கையினால் விஷ்ணு வென்றும், சத்துவத்தில் ரஜஸ் பிரதாநமாகும் போது, அதில் பிரதிவிம்பித்த ஈசுரன் சகத்தைச் சிருஷ்டிக்கையினால் பிரமா வென்றும், சத்துவத்தில் தமஸ் பிரதாநமாகும் போது, அதில் பிரதிவிம்பித்த ஈசுரன் சகத்தை உபசம்மாரம் (கூடிய அழிவு) பண்ணுகையினால் உருத்திர னென்றுஞ் சொல்லப்படுவன். இப்படி மூலப் பிருகிருதியின் சத்துவ குண கற்பனை சொல்லப்பட்டது.

3. இனி மூலப்பிருகிருதியின் ரஜோ குணம் அநேக ரூபமாய்ப் பிரிந்து, அவித்தைகளென்றும், சீவ காரண சரீரங்களென்றும், ஒன்றற் கொன்று தாரதம்மிய (ஏற்றத் தாழ்வாக) மாகச் சொல்லப்படும். இந்த அவித்தைகளிடத்திலும் மலிந சலப் பிரதிவிம்பம் போலப் பிரம சைதன்யம் (அறிவுடைய ஆத்மாக்களாக சித்துக்களாக) பிரதி விம்பிக்கும். இந்த பிரதிவிம்ப சைதன்யங்களைக் கிஞ்சிக்ஞரென்றும், ஜீவ சிதாபாசரென்றும், பிராக்ஞ ரென்றுஞ் சொல்லப்படும். இந்த அவித்தைகளிடத்திலேயும் ரஜஸில் சத்துவம், ரஜஸில் ரஜஸ், ரஜஸில் தமஸ் என மூன்று குணங்களுண்டு. இரஜஸில் சத்துவம் பிரதாநமாகும் போது, அதில் பிரதிவிம்பித்த சிதாபாசன் (சித்துப் போலத் தோன்றியும் சித்து–அறிவான ஆத்மாவின்-இலக்கணம் இல்லாதது) தத்துவ ஞான நிஷ்டனாவான். ரஜஸில் ரஜஸ் பிரதாநமாகும் போது, அதில் பிரதி விம்பித்த சிதாபாசன் காமக் குரோத பரனாய் கர்மநிஷ்டனாவான் இரஜஸில் தமஸ் பிரதாநமாகும் போது, அதில் பிரதிவிம்பித்த சிதாபாசன் சோம்பல் நித்திரை மயக்கம் ஆகியவகைகளை யடைவான். இப்படி மூலப் பிரகிருதியின் இரஜோ குண கற்பனை சொல்லப்பட்டது.



4. இனி மூலப் பிருகிருதியின் தமோ குணத்திற்கு, ஆவரணம், விக்ஷேபம் என இரண்டு சக்திகள் உண்டு. இவ்விரண்டில், ஆவரண சக்தியானது தத்துவ ஞாநியையும், ஈசுரனையும் தவிர, மற்றைச் சீவருக்கெல்லாம் சரீரத்திரயம் சிதாபாசன் சாக்ஷி சைதன்யம் என்னு மிவைகளின் ஒன்றற் கொன்றுள்ள பேதந் தெரிய வொட்டாமல் மறைக்கும். இதனால் மறைக்கப் பட்ட ஜீவர் இருபத்தொன்பது தத்துவங்களையும் ஒருமைப் பாடாக நானென்ற பிமானிப்பர். இந்த அபிமாநத்தை, அகங்காரக் கிரந்தி யென்றும், சம்சார பந்த மென்றுஞ் சொல்லப் படும். சத்குரு கடாக்ஷத்தினாலே இந்த ஆவரணம் நீங்கி, இருபத்தொன்பது தத்துவங்களிற் ஒன்றற் கொன்றுள்ள பேதந் தெரிகின்றதே முக்தி. இப்படி ஆவரண சக்தியின் காரியஞ் சொல்லப்பட்டது.

5. இனி விக்ஷேப சக்தியினின்றும் சத்த தந்மாத்மிரையான ஆகாசந் தோன்றிற்று ஆகாசத்தினின்றும் ஸ்பரிச தந்மாத்திரையான வாயு தோன்றிற்று. வாயுவினின்றும் ரூப தந்மாத்திரையான அக்கிநி தோன்றிற்று. அக்கிநியினின்றும் ரஸ தந்மாத்திரையான அப்பு (நீர்) தோன்றிற்று. அப்புவினின்றும் கந்த தந்மாத்திரையான பிருதிவி (பூமி) தோன்றிற்று. இந்தச் சூட்சம பஞ்ச பூதத்திற்குக் காரணமாயிருக்கின்ற விக்ஷேப சக்தியினிடத்திலே, தமஸில் சத்துவம், தமஸில் ரஜஸ், தமஸில் தமஸ் என்னுமிவை அற்பக்கருவாக விருந்த படியால், அதன் காரியமாகிய இந்தத் தந்மாத்திரைகளான பஞ்ச பூதங்களும் முக்குணங்களுடனே பிறந்தன. இந்த பஞ்சபூதங்களுக்குத் தந்மாத்திரைக ளென்றும். அபஞ்சீகிருத பூதங்க ளென்றும், சூட்சும பூதங்களென்றும், முக்குண பூதங்களென்றும் சாஸ்திரங்களில் நாமஞ் சொல்லப்படும்.

6. இந்தச் சூட்சும பூதங்களினின்றும் சூட்சும சரீரங்களும், ஸ்தூல பூதங்களும் தோன்றும். அஃதெங்கன மெனின் :– ஆகாச முதலான பஞ்ச பூதங்களின் சத்துவாம்சத்திலே பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை எடுத்து ஒன்றாகக் கூட்டி வைத்தது அந்தக்கரணம். இந்த அந்தக்கரணத்தில், ஆகாசத்தின் அம்சங் கூடினதற் கடையாளம். இந்த அந்தக்கரணமும் ஆகாசத்தைப்போலச் சகலமான கேள்விக்கும் இடங் கொடுத்துத் தரிகின்றது. இப்படித் தரிக்கின்ற விருத்திக்கு (எண்ணங்களுக்கு–அந்தக்கரண பரிணாமத்திற்கு) உள்ளம் (தேஜஸ்) என்று பெயர். இந்த அத்தக்கரணத்தில் வாயுவி னம்சங்

கூடினதற் கடையாளம், இந்த அந்தக்கரணமும் வாயுவைப் போல அலைகின்றது. இப்படி அலைகின்ற விருத்திக்கு மநம் என்று பெயர். இந்த அந்தக்கரணத்தில், அக்கிநியி னம்சம் கூடினதற் கடையாளம், இந்த அந்தக்கரணமும் அக்கிநியைப் போல ஈதின்ன தென்று விளக்கு விக்கிறது. இப்படி விளக்கு விக்கின்ற விருத்திக்கு புத்தி யென்று பெயர். இந்த அந்தக் கரணத்தில் அப்புவி, (நீர்) னம்சங் கூடினதற் கடையாளம், இந்த அந்தக்கரணமும் அப்புவைப் போல விஷயங்களைப் (பொருள்களைப்) பற்றி இழுக்கின்றது. இப்படி இழுக்கின்ற விருத்திக்கு சித்த மென்று பெயர். இந்த அந்தக்கரணத்தில், பிருதிவியி னம்சங் கூடினதற் கடையாளம், இந்த அந்தக் கரணமும் பிருதிவியைப் போலக் கடினமாக நின்று நான் என்று அபிமானிக்கின்றது (ஆசை வைக்கிறது) இந்த அபிமான விருத்திக்கு அகங்காரமென்று பெயர்.

7. இன்னும். ஆகாச முதலான பஞ்ச பூதங்களினுடைய சத்துவாம் சத்திலே பூதத்திற் கொரு மாத்திரை (அளவு) யெடுத்துத் தனித் தனியே வைத்தது சுரோந்திராதி ஞாநேந் திரிய மென்று சொல்லப்படும். இவைகளில், சுரோந்திரம் (காது) ஆகாசத்தி னம்சமானபடியினால் ஆகாசத்தின் குண மான சத்த தந்மாத்திரத்தை அறியும். துவக்கு (ஸ்பரிசம்-மெய்) வாயுவி னம்சமானபடியால் வாயுவின் குணமான ஸ்பரிச மாத் திரத்தை அறியும். சக்ஷு (கண்) அக்கிநி னம்சமானபடியால் அக்கிநியின் குணமான ரூப (உருவ) மாத்திரத்தை அறியும். சிங்யுவை (நாக்கு) அப்புவி னம்சமானபடியால் அப்புவின் குணமான ரஸ மாத்திரத்தை அறியும். கிராணம் (மூக்கு) பிருதிவியி னம்சமானபடியால் பிருதிவியின் குணமான கந்த மாத்திரத்தை அறியும். இப்படி ஐந்தும் ஒன்றோ டொன்று கூடாதபடியால் ஒன்று மற்றொன்றின் குணத்தைக் கிரகிக்க வறியாது. அந்தக்கரணத்தில், ஐந்து மாத்திரையும் ஒன்றாகக் கூடினது கொண்டு ஐந் திந்திரியங்களினாலும், ஐந்து விஷயங் களையும் (விபரங்களையும்) அறியும். இந்தச் சத்துவ குணத்தி லுண்டான அந்தக்கரணம் ஐந்தும், ஞாநேந்திரியம் ஐந்தும்' ஆகப் பத்தும் சத்துவாம்ச மானபடியால் ஞான சாதன மாயின.

8. இன்னும், ஐந்து பூதங்களினுடைய இரஜோம்சத்திலே, பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை எடுத்து ஒன்றாகக் கூட்டி வைத்தது வியாநாதி பஞ்ச வாயுக்கள். இவைகளில் வியான வாயு ஆகாசத்தி னம்சமானபடியால் ஆகாசத்தைப் போலச்



சர்வாங்கமும் வியாபித்திருக்கும். பிராணவாயு வாயுவி னம்ச மானபடியால் வாயுவைப்போல் இருதயத்திலிருந்து நாசிகாதி பரியந்தம் (மூக்கின் நுனி வரைக்கும்) அலையும். அபாந வாயு அக்கிநி யினம்சமானபடியால் அக்கிநியைப் போலச் சாடராக் கிநியாக உஷ்ணித்துக் கொண்டு குதத்தைப் பற்றி நின்று உண்ட வந்ந பாநாதிகளைச் சீரணிப்பிக்கும். சமாந வாயு அப்புவி னம்சமானபடியால் சரீர நடுவான நாபித் தாநத்தி னின்று உண்ட அந்ந ரஸங்களை அப்புவைப் போல இழுக் கும். உதாந வாயு பிருதிவியி னம்சமானபடியால் கண்டத்தைப் பற்றிப் பிருதிவியைப்போலக் கடினமாக நின்று, உண்ட அந்ந பாநாதிகளைக் கடையும். இந்தப் பஞ்ச வாயுக்களையு மல்லா மல். வாந்தி பண்ணுவிக்கின்றது நாகனென்றும், இமைத்து விழிப்பிக்கின்றது கூர்மனென்றும். குறு குறுத்துத் தும்மச் செய் கின்றது கிரிகர னென்றும், கொட்டாவி கொள்ளச் செய்கின்றது தேவதத்த னென்றும், வீங்கச் செய்கின்றது தனஞ்சய னென் றும், வேறே ஐந்து வாயுக்க ளுண்டென்று சிலர் (சில மதவாதி கள்) கூறுவர். இவ் வைந்தும் பிராணனுடைய தொழிலானபடி யால் வேறல்ல, (பிராணனே)

9. இன்னும், ஆகாச முதலிய பஞ்ச பூதங்களினுடைய இரஜோம்சத்திலே, பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை யெடுத் துத் தனித் தனியே வைத்தது வாக்காதி கர்மேந்திரிய மென்று சொல்லப்படும். இவைகளில், ஆகாசத்தினிடமாக வாக்கு வசநிக்கும். வாயுவினிடமாகப் பாணி இடுதல் ஏற்றல் செய்யும். அக்கிநி னிடமாகப் பாதம் நடக்கும். அப்புவி னிடமாகப் பாயுறு மலஜலாதிகளை வெளியிலே தள்ளும். பிருதிவியி னிடமாக உபஸ்தம் (கருவாய்) சுகத்தைப் பண்ணும். இந்த ஐந்துந் தனித்தனியே இருந்தது கொண்டு மறு தொழில் செய்ய மாட் டாது, வியாநாதி வாயுக்கள் ஐந்து மாத்திரையும், ஒன்றாய்க் கூடினது கொண்டு, கர்மேந்திரியம் ஐந்தின் வழியினாலும் ஐந்து தொழில்களையுஞ் செய்து முடிக்கும். இந்த வாயுக் களைந்தும், கர்மேந்திரியங்களைந்தும், ஆகப் பத்தும் இரசோம்ச மானபடியினால் கிரியா சாதநமாயின. அந்தக்கரணம் 5, ஞாநேந்திரியம் 5, வாயுக்கள் 5, கர்மேந்திரியம்5 ஆக இருபது தத்துவமுஞ் சூக்ஷ்ம சரீர மென்று சொல்லப்படும். இந்தச் சூக்ஷ்ம சரீரத்தை மாயாப் பிரதி விம்பனாக விருக்கின்ற ஈசுரன், அவித்தையாப் பிரதிவிம்ப ராகிய சீவர்கள் அநேக ராகையால், ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு சரீரமாகச் கிருஷ்டித் தளித்தான். இப்படிச் சூக்ஷ்ம சரீர கற்பனை சொல்லப்பட்டது.

10. இனி ஸ்தூல பூதவுற்பத்தி சொல்லல்:- தமோம்சமா
யிருக்கின்ற ஐந்து பூதங்களையும், ஒவ்வொன்றை இரண்
டிரண்டாகப் பகுத்து, முதற்பாதி ஐந்தையும் ஒவ்வொன்றை
நர்ன்கு நான்காகப் பகுத்து, இரண்டாம் பாதி ஐந்தில், தன்
னம்சத்துடனே கூட்டாமல் மற்றை நான்கு பூதங்களுடன் அரை
கால் அரைக்கால் மாத்திரையாகக் கொடுக்கின்றது பஞ்சீகரண
மென்று சொல்லப்படும். இப்படிப் பஞ்சீகரணம் பண்ணின
தூல பூதங்களிலே ஆகாசத்திலே, பரிச ரூப ரஸ கந்தம் ஆகிய
நான்கு குணங்களும் வியாப்பிய (விரிவு உடையது) மானபடி
யால், அதிருசியமாய்ப் ( அறிய முடியாதது) போக நிச குண
மாகிய சத்தந் திருசிய மாம். வாயுவிலே, ரூப ரஸ கந்தம்
ஆகிய மூன்று குணங்களும் வியாப்பிய மானபடியினால்
அதிருசியமாப் போகக், காரண குணமாகிய சத்தமும், நிச
குணமாகிய பரிசமுந் திருசியமாம். அக்கினியிலே, ரஸ கந்த
மாகிய இரண்டு குணங்களும் வியாப்பிய மானபடியினால்
அதிருசியமாய்ப் போகக் காரண குணங்களாகிய சத்தமும்
ஸ்பரிசமும், நிச குணமாகிய ரூபமும் திருசியமாம். அப்புவிலே,
கந்த குணம் வியாப்பியமானபடியால் அதிருசியமாய்ப் போகக்
காரண குணங்களாகிய சப்த ஸ்பர்ச ரூபமும், நிச குணமாகிய
ரஸமும் திருசியமாம். பிருதிவியிலே, காரண குணங்களாகிய
சப்த ஸ்பர்ச ரூபரஸமும், நிச குணமாகிய கந்தமும் திருசியமாம்.

11. முன் சூக்ஷ்ம பூதங்களி னின்றும் சூக்ஷ்ம சரீரங்கள்
தோன்றினாற் போலப், பஞ்சீகரணம் பண்ணின ஸ்தூல
பூதங்களி னின்றும், ஆறு தத்துவமாய் (தோல். இரக்தம்,
சதை, நரம்பு, எலும்பு, கொழுப்பு). நால்வகைப் பிறப்பாய்
(கருப்பையிலிருந்து பிறப்பது, முட்டையிலிருந்து பிறப்பது,
வியர்வையிலிருந்து பிறப்பது, நிலத்திலிருந்து பிறப்பது-தாவ
ரங்கள்), மூவகைச் சாதியா (1, உத்தம சாதி-இகலோக பரலோக
புத்தி இருவகையும் கொடுக்கிற மாநுடன்; (2.) மத்திம சாதி-
பரலோக புத்தியை மறைத்து இகலோக புத்தி மாத்திரங்
கொடுக்கிற பசு பக்ஷி; (3) அதம சாதி-இகலோக பரலோக
இரண்டு லோக புத்தியையும் மறைத்திருக்கிற மரம் செடி
கொடி ) யிருக்கின்ற ஸ்தூல சரீரங்கள் தோன்றின; இப்படிப்
பிருதிவி தத்துவமா யிருக்கின்ற பூலோகத்திற் கண்டாற்போல,
அப்பு, அக்கிநி, வாயு, ஆகாசம் எனப்பட்ட தத்துவங்களாய்
நிரை நிரையே (வரிசை வரிசையாக) யிருக்கின்ற பிதிர்லோகம்
தேவலோகம், யட்ச கந்தர்வ சித்தர் லோகங்களிலும், நட்சத்
திரமாகத் தோன்றுகின்ற சந்திரன் முதலான பிதுர்க்கள்,



சூரியன் முதலான தேவதைகள், கந்தர்வர் சித்தர் எனப்பட்ட
வர்கள் உத்தம சாதி; காமதேநு ஐராவதம் அந்நம் கருடன்
முதலானவை மத்திம சாதி; கற்பக விருட்சம் பாரிஜாதம்
முதலியவை அதம சாதி; (பஞ்ச கோசப் பிரிவு:-) இந்த ஸ்தூல
சரீரமே அந்நமய கோசம், சூக்ஷ்ம சரீரம் மூன்று கோசங்களா
யிருக்கும். அஃதெங்ஙண மெனின்:- பிராண வாயுவும், கர்மேந்
திரியங்களுங் கூடிப் பிராணமய கோசம், மநசும், ஞாநேந்திரி
யங்களுங் கூடி மநோமய கோசம், புத்தியும், ஞானேந்திரியங்
களுங் கூடி விஞ்ஞான மயகோசம், காரண சரீரமே ஆநந்த
மய கோசம். இப்படிப் பஞ்சகோசஞ் (மறைப்பு-உறை)
சொல்லப்பட்டன.

12. ஆறு தத்துவங்களா யிருக்கின்ற ஸ்தூல சரீரத்திலே,
இருபது தத்துவங்களா யிருக்கின்ற சூக்ஷ்ம சரீர மிருக்கின்றது.
அஃதெப்படியெனின்:- கர்மேந்திரியங்களுள் வாக்கும், ஞாநேந்
திரியங்களுள் சிங்யுவையும் (நாக்கும்), வாயிலிருக்கும். உதாந
வாயவும் மநதும், கண்டத்திலே யிருக்கும். பிராண வாயுவும்
புத்தியும் இருதயத்திலே யிருக்கும். சமாந வாயுவும் சித்தமும்
நாபியி லிருக்கும். அபாந வாயுவும் பாயுருவும் குதத்தி
(மலத்துவாரத்தி) லிருக்கும். வியான வாயவும் ஞாநேத்திரி
யங்களுள் துவக்கும் (தோல் உணர்வு), அகங்காரமும், சர்வாங்
கமும் வியாபித்திருக்கும். உச்சியிலே (சிரம்) உள்ளமும்,
கருவிழி நுனியிலே சக்ஷுரிந்திரியமும், காதிற் குள்ளே சுரோத்
ரேந்திரியமும், மூக்கு நுனியிலே கிராணேந்திரியமும், கழுத்து
திற்கு மேலே தனித் தனியே யிருக்கும். கழுத்திற்குக் கீழே,
கை கால் குய்யங்களில் (கருத்துவாரம்) பாணி (கை) பாதம்
உபஸ்தம் மூன்றுந் தனித்தனியே யிருக்கும். இப்படித் தூல
சரீர தத்துவங்கள் ஆறு, அதிற் குடி புகுந்த சூக்ஷ்ம சரீர தத்
துவங்கள் இருபது; ஆகத்தத்துவங்கள் இருபத்தாறும், பஞ்ச
பூதங்களின் காரிய மானபடியினாலே ஒருமைப்பாடாகக்
காரிய சரீர மென்று சொ்ல்லப்படும்.

13. அவித்தையிற் பிரதிவிம்பித்த சிதாபாசன், சாக்கிரத்
திலே, இந்த இருபத்தாறு தத்துவங்களுடனே கலந்து நின்ற
போது, விசுவனென்றும், வியாவகாரிக சீவ னென்றுஞ் சொல்
லப்படுவன். சொப்பனத்திலே, ஸ்தூல சரீரத்தை விட்டு,
அந்தக் கரணத்துடனே கூடி நின்ற போது, தைஜசனென்றும்,
பிராதிபாசிக ஜீவனென்றும். சொப்பன கற்பித னென்றுஞ்
சொல்லப்படுவன். சுழுத்தியிலே காரிய சரீர தத்துவங்கள்

இருபத்தாறையுங் கைவிட்டுக் காரண சரீரத்தை மாத்திரம் பொருந்தியிருக்கும் போது, பிராக்ஞ னென்றும், பாரமாத்திக சீவனென்றுஞ் சொல்லப்படுவன். பிரம சைதன்யமும், சாக்கிரத்திற்குச் சாக்ஷியா யிருக்கும் போது, சீவாத்மா வென்றும், சொப்பனத்திற்கு சாக்ஷியா யிருக்கும் போது அந்த ராத்மா வென்றும், சுழுத்திற்குச் சாக்ஷியா யிருக்கும் போது, பரமாத்மா வென்றும், அவஸ்தாத் திரய சாஷியாயிருக்கும் போது, ஞாநாத்மா வென்றும், கூடஸ்த னென்றுஞ் சொல்லப்படும். இப்படிச் சீவனுக்கு மூன்று சரீரங்களும், மூன்றவஸ்தைகளுஞ் சொல்லப்பட்டன.

14. இனி, ஈசுரனுக்கு மூன்று சரீரங்களும் மூன்றவஸ்தைகளுஞ் சொல்லும்படி : கற்பிதப் பிரபஞ்ச வடிவமாகத் தோன்றுகின்ற தூல பஞ்ச பூதங்களும், அந்தப் பூதங்களாலே தோன்றிய மூன்று சாதியா யிருக்கின்ற தூல சரீர சமஷ்டியுங்கூடி, ஈசுர தூல சரீர மென்றும், விராட் டென்றுஞ் சொல்லப்படும். இதனுடனே கூடிச் சாக்ராவஸ்தையைப் பொருத்துகின்ற ஈசுரன், வைசுவாநர னென்றும், இந்த இருவகைக்கும் அதிஷ்டாந சைதன்யம் பிரம்மா வென்றுஞ் சொல்லப்படும். சூக்ஷ்ம பூதங்களைந்தும், அந்தப் பூதங்களிலே தோன்றிய, சூக்ஷ்ம சரீர சமஷ்டியும் கூடி, ஈசுர சூக்ஷ்ம சரீர மென்றும், இரண்யகர்ப்ப மென்றுஞ் சொல்லப்படும். இதனுடனே கூடிச் சொப்பனாவஸ்தையைப் பொருந்துகின்ற ஈசுரன், சூத்ராத்மா வென்றும், இந்த இருவகைக்கும் அதிஷ்டான சைதன்யம் விஷ்ணு வென்றுஞ் சொல்லப்படும். இந்தத் தூலம் சூக்ஷ்மம் இரண்டின் வாசனையினுடனே கூடியிருக்கின்ற மாயை, ஈசுர காரண சரீர மென்றும், அவ்யாகிருதம் (வெளிப்படாதது) மென்றுஞ் சொல்லப்படும். இதனுடனே கூடிச் சுழுத்தி யவஸ்தையைப் பொருத்துகின்ற ஈசுரன், அந்தர்யாமி (உள்ளேயிருந்து இயக்குபவன்) யென்றும், இந்த இருவகைக்கும் அதிஷ்டாந (கற்பிதப் பொருள் தோற்றத்திற்கு ஆதாரமாயிருப்பது) சைதன்யம், உருத்திர னென்றுஞ் சொல்லப்படும் சீவன், தன் மூன்றவஸ்தைகளிலும், தன் மூன்று சரீரங்களாயிருக்கின்ற இருபத்தேழு தத்துவங்களுடனும், நானென்று கலந்து நிற்கின்றது போல, ஈசுரனுந் தன் மூன்றவஸ்தைகளிலுந் தன் மூன்று சரீரங்களாயிருக்கின்ற முப்பத்திரண்டு தத்துவங்களுடனும் கலந்து நிற்பன் ஆகையினாலே, சீவ சிதாபாசன் தன் சரீர மாத்திரமே கலந்து நிற்பன். ஈசுரன் தன் சரீரமாகிய சகல சரீரங்களோடும், சகல பிரபஞ்சங்களோடும், கலந்து நிற்பன். இந்த இருவகைக்கும்



சாஷியா யிருக்கின்ற பிரம சைதன்யமும். சகல சரீரங்களிலும், சகல பிரபஞ்சங்களிலும், நிறைந்து, அப்பாலும் பத்துத் திக்கையும் அதிக்கிரமித்து, எல்லையற்றிருக்கும்.

15. சீவனுக்குத் தூல சரீர வியவகாரத்திற்கு (செயல்படுவதற்கு) அந்நமயமான சட்கோச தத்துவங்கள்–6, சூக்ஷ்ம சரீர தத்துவங்கள்–20. சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்5 ஆகத் தத்துவங்கள் 31; சூக்ஷ்ம சரீர வியவகாரத்திற்கு சூக்ஷ்ம சரீர தத்துவங்கள் 20, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்5 ஆகத் தத்துவங்கள் 25; காரண சரீர வியவகாரத்திற்கு, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம் ஆக 5. சீவ வியவகாரத்திற்கு, சீவன், ஈசுரன், பிரமம் ஆக 3, சாக்ஷி வியவகாரத்திற்கு சாஷி–1. ஈசுரனுக்குத் தூல சரீர வியவகாரத்திற்கு, சமஷ்டி அந்நமய கோச தத்துவங்கள்–6, சமஷ்டி சூக்ஷ்ம சரீர தத்துவங்கள்–20, சமஷ்டி சீவன், அவித்தை-2, ஈசுரன், வித்தை, பிரமம்-3, தூல பூதங்கள்-5, ஆகத் தத்துவங்கள்–36. சூக்ஷ்ம சரீர வியவகாரத்திற்குச், சமஷ்டி சூக்ஷ்ம சரீர தத்துவங்கள்–20, சமஷ்டி சீவன் அவித்தை–2, சூக்ஷ்ம பூதங்கள்–5, வித்தை, ஈசுரன், பிரமம்-3 ஆகத் தத்துவங்கள்-30. காரண சரீர வியவகாரத்திற்கு, ஈசுரன் பிரமம் வித்தை ஆக-3. ஈசுர வியவகாரத்திற்கு ஈசுரன் பிரமம் 2. பிரம வியவகாரத்திற்குப் பிரமம்–1. இந்திரிய வியவகாரத்திற்கு, இந்திரியம்–1, சட்கோச தத்துவங்கள்–6, அந்தக்கரணம்–5, வாயுக்கள்–5, சீவன். ஈசுரன், அவித்தை, வித்தை, பிரமம்-5, ஆக தத்துவங்கள் 22. மநோ ராஜ்ச்சிய வியவகாரத்திற்கு, அந்தக்கரணம் 5, சீவன், ஈசுரன், அவித்தை, வித்தை. பிரமம்-5. ஆகத் தத்துவங்கள்–10. இப்படித் தத்துவங்களினுடைய தோற்றமும் நிலையுஞ் சொல்லப்பட்டன.

16. இனித் தத்துவங்கள் ஒடுங்குகின்ற வழி சொல்லப்படுகிறது. சகல சீவரிடத்திலு மிருக்கின்ற தூல சரீரங்களனைத்தும் தமக்கு ஆதாரமான தூல, பூதங்களிலே மடிந்து பூதமாத்திரமாக ஒடுங்கும். இந்தத்தூல பூதங்களும், பஞ்சீகரணம் விட்டுத் தந்மாத்திரைகளான தமோ குண பூதங்களாக மிஞ்சும். அப்போது கேவலம் இரண்ய கர்பாவஸ்தை (தனித்து சமஷ்டி சூக்ஷ்ம சரீர காலம்) யென்று சொல்லப்படும். சூக்ஷ்ம சரீர தத்துவங்களிருபதுங் கட்டு விட்டுப் பூதங்களினுடைய சத்துவ குணமும், இரசோகுண மு மாக ஒடுங்கும். அஃதெங்கனமெனின்:- சகல பிராணிகளிடத்து மிருக்கின்ற அகங்காரமும்,

கிராணேந்திரியமும், உதாந வாயுவும், உபஸ்தேந்திரியமும் பிருதிவியில் ஒடுங்கும். சித்தமும், சிங்யுவையும், சமாநவாயுவும், பாயுருவும், அப்புவில் ஒடுங்கும். புத்தியும், சக்ஷுவும், அபாந வாயுவும், பாதமும், அக்கினியில் ஒடுங்கும். மநதும், தொக்கும், பிராணனும், பாணியும்,வாயுவில் ஒடுங்கும். உள்ளமும், சுரோந் திரமும், வியாந வாயுவும், வாக்கும் ஆகாசத்தில் ஒடுங்கும். அப்போது பழையபடியே முக்குண பூதங்களாகும். இந்தச் சூக்ஷ்ம பூதங்களும், பிருதிவி. அப்புவில் கரைந்து ஒடுங்கும். அப்புவும், அக்கினியிற் சுவறி (வற்றி) ஒடுங்கும். அக்கினியும், விளக்குப் போல, வாயுவில் அனைந்து ஒடுங்கும், வாயுவும், ஆகாசத்திலே ஓய்ந்து ஒடுங்கும். ஆகாசமும், விக்ஷேப சக்தியில் ஒடுங்கும். ஆவரண சக்தியும், விக்ஷேப சக்தியும், மூலப் பிருகிரு தியின் தமோ குண மாத்திரமாய், ஆலமரம் ஆலம் விரையில் ஒடுங்கினாற் போல, இன்னும் ஒரு சிருஷ்டிக்கு வித்தாக, மாயையிலும், அவித்தையிலும், ஒடுங்கும். இந்த மாயையும். அவித்தையும், அதி நுண்மையான மூலப் பிருகிருதி யென்று சொல்லப்பட்ட விந்து தத்துவத்தில் ஒடுங்கும். அந்த விந்துவும், பாம் பென்கின்ற பெயர் போய்ப் பழுதையாகக் கண்டாற் போலத் தனக்கு அதிஷ்டான சைதன்யமான பிரம சைதன்ய மாத்திரமாக ஒடுங்கும். இப்படிப் பொய் யெல்லாம் மெய்ப் பொருள் ஒன்றாகக் கண்டு. அதுவே சுபாவ சித்தமாய் நிசமா யிருக்கின்ற தன் வடிவெனக் கண்டு தெளிந்து, கவலை கெட்டிருக்கின்றவனே சீவன் முக்தன். இப்படித் தத்துவங்களின் ஒடுக்கஞ் சொல்லப்பட்டது.

17. இப்படித் தோன்றி ஒடுங்கின தத்துவங்கள் 36. அவையா வன:- பூதங்கள் 5, ஸ்தூல சரீரதத்துவங்கள் 6, சூக்ஷ்ம சரீரதத் துவங்கள் 20, காரண சரீரமான மாயை அவித்தை 2. இவற்றில் பிரதிவிம்பித்த ஈசுரன் சீவன் 2, இவைகட் கெல்லாம் அதிஷ் டான சைதன்யமா யிருக்கின்ற பிரமம் 1 இவையாம். இவை களில், பூதங்கள் 5, மாயை 1, மாயாப் பிரதி விம்பரான ஈசுரன் 1, பிரமம் 1 ஆக, இந்த எட்டும் சகல பிராணிகளுக்குஞ் சமுதாயமாக (பொதுவாக) அநுபவிக்கப்படும். மற்றை இருபத் தெட்டும், அவன் அவனுக்கு பிரதக்காக (வேறாக) அநுபவிக் கப்படும். அஃதெங்கன மெனில்:- பிருதிவி தத்துவம் ஒன்று இறக்கில், எல்லோருக்கும் ஆதாரமில்லை. மழை மறுக்கில், எல்லோருக்கும் சல மில்லை. தேயு (அக்கினி) வில்லாதிருந் தால் பாக (பக்குவ) மில்லை. வாடை (காற்று) தென்றல் இல்லா விட்டால், வாயு வியக்கமில்லை. (ஈசுரகாரண சரீரம்.)



ஆகாசம் இறக்கில், ஒருவருக்கும் அவகாச (இட) மில்லை. மாயையும், மாயாப் பிரதி விம்பரும் இறக்கில்,சகல சமயங்களுக் குந் தெய்வமில்லை. பிரம மில்லையோ, ஒருவருக்கும் அறி (உணர்வு) வில்லை. ஆகையால், இந்த எட்டும் எல்லோருக் குஞ் சமுதாயமாம். பிருதக்கு (வேறு) எங்ஙனமெனின்:- ஒரு வனுக்கு ஸ்தூல சரீரம் இறக்கில், ஏல்லோருக்கும் ஸ்தூல சரீரம் இறவாத படியினாலும், சூக்ஷ்ம சரீரத்தில் ஒருவனுக்கு அங்கவைகல்யம் (குறைவு) வந்தால், எல்லோருக்கும் வராத படியினாலும், முக்தராயிருந்த சுகர் வாமதேவர் முதலியோ ருக்கு, அவித்தையும், சீவனும் இறந்துபோயிருக்க, மற்றை யோருக்கெல்லாம் அவித்தையும், சீவனும், இறவாத படியினா லும், இந்த இருபத்தியெட்டு தத்துவங்களும் அவனவனுக்குப் பிருதக் கென்பதிலே சந்தேகமே யில்லை.

18. இந்தத் தத்துவங்கள் முப்பத்தாறில், எப்போதும் தானாகவே காணப்படுகின்ற தத்துவம் ஒன்று. எப்போதும் தனக் கந்நியமாகக் காணப்படுகின்ற தத்துவங்கள் ஏழு. தானாகவும், தனக் கந்நியமாகவும், அநுபவிக்கப்படுகிற தத்து வங்கள் இருபத்தெட்டு. அஃதெங்கன மெனில்:- அவஸ்தாத் திரய சாக்ஷியாயிருக்கின்ற பிரம சைதன்யம், எல்லா வவஸ்தை (காலங்) களிலுந் தானாக விளங்குகையினாலும், மற்றதை தத்துவங்கள் போலத் தனக் கந்நியமாக விளங்காத படியினா லும், அந்தப்பிரம சைதன்யம் ஒன்றுமே தானாகக் காணப் படுகிறது. பஞ்ச பூதங்கள், மாயை, மாயாப் பிரதி விம்பர் ஆக ஏழும் தந் தந் தொழிலான வெட்டு. கொத்து, உழவு, பஞ்ச கிருத்தியம், தசாவதார முதலானவை, ஒரு காலும், தன்னுடைய தொழிலாகக் காணப்படாதபடியினாலே, தனக் கந்நியங்களே யல்லாமல் தானாக மாட்டா. மற்றை 28 தத்து வங்களுக்குள்ளே, நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரன், நான் பிரமசாரி, நான் கிருகஸ் தன், நான் வாநப்பிரஸ்தன், நான் சந்நியாசி, நான் ஆண், நான் பெண். நான் கறுவல், சிவலை, கட்டையன், நெட்டை யன், நான் பருத்தேன், இளைத்தேன், என்று தானாக வழங் குகிற, ஸ்தூல சரீரம் ஆறு தத்துவங்களும், மற்றொரு வேளையிலே, தனக்குப் புறம்புபட்டு என் மாடு என் கன்று என்றாற் போல, என் சரீரம் பருத்தது, இளைத்தது, நரைத் தது, என் சரீரம் பிறந்து இத்தனை நாளாயிற் றென்று, தான் வேறு தன் தூல சரீரம் வேறாக வழங்குகின்ற படியி னாலும், நான் கண்டேன், கேட்டேன், தொட்டேன்,

போகித்தேன், கொடுத்தேன், வாங்கினேன், நடந்தேன், புசித்தேன், சிந்தித்தேன், நிச்சயித்தேன், இந்தப் பஞ்சத்திற் குச் சீவித்தேன் என்று தானாக வழங்குகின்ற சூக்ஷ்ம சரீர தத்துவங்கள் இருபதும், மற்றொரு வேளையிலே, தனக்குப் புறம்புபட்டு, என் வீடு, என் உடமை என்றாற் போல, என் கண், என் காது, என் மூக்கு, என் நாக்கு, என் கை, என் கால், என் மநம், என் புத்தி, என் அகங்காரம், என் சித்தம், என் பிராணன் என்று, தான் வேறு, அவைகள் வேறாக வழங்கு கின்ற படியினாலும், நான் அறிவேன், அறியேன் என்று. தானாக வழங்குகின்ற அஞ்ஞானமும், சிதாபாசனும், மற்றொரு வேளையிலே தனக்குப் புறம்புபட்டு, என் அஞ்ஞானம், என் சீவன் என்று வழங்கக் கண்டபடியினாலும், இந்த 28 தத்து வங்களும், தானாகவும், தனக்கு அந்நியமாகவும், வழங்கு கின்றது சித்தம்.

19. இப்படிச் சொன்ன குருவைப் பார்த்துச் சீடன் கேட் கும்படி:- இந்த 28 தத்துவங்களுந் தானானால், சாக்ஷியைப் போல, ஒரு தன்மையாக (ஒரே பிரகாரமாக) தோற்ற வேண் டுமே யல்லாமல், பஞ்ச பூதங்களைப் போலத் தனக் கந்நிய மாகக் காணக் கணக்கில்லை. இந்த இருபத்தியெட்டும், தனக் கந்நியமே யானால், எப்போதும் புறம்புபட்டே இருங்க வேண்டுமல்லாமல், தானாக வழங்கக் கணக்கில்லை. தானு மாய்த், தனக்கந்நியமுமாய் இருக்கு மென்கிறது, 'இருட்டா தித்தன்' (இருள் உடை சூரியன்), என்றாற் போலவும், வேளாள தீக்ஷிதன் (சூத்திர பிராமணன்-கீழ்மேல் சாதிக்காரன்) என்றாற் போலும் விருத்தமா மென்னுஞ் சங்கைக்கு:- பரமார்த்தமாகத் (உண்மையாக) தான் என்கின்றது ஒரு வகை யும், அத்தியாசத்தினாலே (ஒன்று மற்றொன்றாகத் தோன்று வதினாலே) தான் என்கின்றது ஒரு வகையும். ஆக இருவகை யும் உண்டு. சாஷி சைதன்யத்தைத், தான் என்கிறது பரமார்த்த மல்லாமல் உபசார (பயனற்ற) தல்ல, தனக்கந்நியமா யிருக் கின்ற இந்த இருபத் தெட்டையும், தான் என்கின்றது, கட்டை யைக் கள்ள னென்றாற் போலும், பழுதையைப் பாம் பென் றாற் போலும், புத்திர தாராதிகளைத் தான் என்றாற் போலும், மயக்கமே யல்லாமல், உண்மையல்ல. ஆகையினால், அஞ்ஞான காலந் தொடங்கித் தானல்ல வென்று காணப் பட்ட தத்துவங்கள் ஏழு, இப்போது இப்படி விவேகம் பண்ணின பின், தானல்ல வென்று காணப்பட்ட தத்துவங்கள் 28, ஆக இந்த 35 தத்துவங்களையும் அததற்குச் சொன்ன, குணம்



பார்க்கின்றவன் குடத்திற்கு புறம்பாகவே யிருந்து, குடத்தைப் பார்க்கின்றது போல, அவைகளை அறிகின்ற தென்றும், முப்பத்தாறாந் தத்துவமாகிய அதுவே தா னென்றும், அதுவே பரப்பிரம மென்றும், கலக்க மறத் தெளிந்தவனே பிரமதரிசந முடைய சீவன் முக்தனென்றுஞ் சொல்லப்படுவ னென்றுத்தரம்.

20. இப்படிப் பிரமமே தா மென்றும் மற்றை முப்பத்தைந்து தத்துவங்களும், தமக்கந்நிய மென்றும், பிரித் தறியாத அவி வேகிகள், அகங்காரக் கிரந்தியினாலே, புத்திர தாராதிகள் தபிக்கின்றதைத் தாம் தபிக்கிறோம். என்கிற மூடகரம் போல (மூடக் கழுதை) இந்த இருபத்தி யெட்டுனுடைய தொழில் களையும், தம் தொழிலென்று மயங்குகின்ற படியினாலே, இந்த இருபத்தெட்டினாலும் ஆர்ச்சிக்கப் (சம்பாதிக்கப்) பட்ட புண்ணிய பாவங்களினாற் கட்டுப்பட்டு, அந்தக் கர்மத்தின் படியே சநந மரணாதி சப்சாரத்திலே அடிபடுகிறோ மென்று மயங்குவர். பிரம சைதன்யமே தா னென்றும். மற்றை முப்பத் தைந்தும் தானல்ல் வென்றுந் தெளிந்த, விவேகியானவன், அகங்காரக் கிரந்தி யற்றபடியினால், இந்த இருபத் தெட்டி னுடைய தொழில்களையும் நான் செய்ய வில்லை யென்றும், இந்த இருபத் தெட்டும் புசிக்கின்றதை நான் புசிக்க வில்லை யென்றும், திடப்படத் தேறி மயக்க மற்றிருக்கின்ற படியினால், இந்த இருபத்தெட்டினாலும் ஆர்ச்சிக்கப் (சம்பாதிக்கப்) பட்ட புண்ணிய பாவங்களினின்றும் விடுபட்டுக் கர்ம மில்லாத படி யினால், சநந மரணாதி சப்சார மில்லாமல், முக்தனாய்ப் பிரம மாத்திரமாகவே யிருப்பன். இவனைச் சீவன் முக்தனென் றும், திடப் பிரக்ஞ னென்றும், அதிவர்ணாசிரமி (நான்கு வர்ணங்களுக்கும்-பிராமணன் க்ஷத்திரியன் வைசியன் சூத்தி ரன்-அப்பாற்பட்டவன்) யென்றும், குணாதீத னென்றும், பகவற் னென்றும், பிராமண னென்றும், வாசிட்ட (வசிட்ட ரால் செய்யப்பட்ட அத்வைத சாஸ்திரம்) முதலிய சாஸ்திரங் கள் முறையிடுகின்றன. சகலரும் இந்தத் தத்துவங்களை விசாரம் (ஆராய்சி) பண்ணி மோக்ஷ மடையக் கடவர்.

நாநா ஜீவ வாதக் கட்டளை முற்றிற்று.



# 2. பஞ்ச கோசம் (5 மறைப்பு)

அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம், ஆகிய இவ் வைங்கோசங்களில், அன்னமய கோசம் மாதா பிதாக்கள் உண்ட அன்னத்தினாலாகிய சுக்கில சுரோணிதங்களால், மாதாவினுத ரத்திலிருந்து உற்பத்தியாகிறது. பிறந்த பின், பால் முதலிய அன்னத்தால் வளர்கிறது. மரணத்தின் பின், அன்னமாகிய பிருதிவியில் ஒடுங்குகின்றது. அதனால், இதுவே அன்னமயகோசமாம். இந்த தூலதேகமாகிய அன்னமய பட்சிக்கு இதுவே (பிரசித்தமாயுள்ளதே) சிரசாம். வலது புஜம் வலது சிறகாம். இடது புஜம், இடது சிறகாம். இது (மத்திய தேகத்தின் பாகம் அங்கங்களின்) ஆத்மாவாம், (சொரூபமாம்) நாபிக்குக் கீழ் அங்கம் புச்ச (வால்) வடிவம் பிரதிஷ்டையாம் ஆதாரமாம் இதுபோக ஸ்தானமாம்.

கன்மேந்திரியங்கள் ஐந்தும், பிராணாதி வாயுக்கள் ஐந்தும், இப்பத்து தத்துவங்களும் சேர்ந்து பிராணமய கோசமெனப்படும். இப்பிராணமய கோச பட்சிக்குப் பிராணனே சிரமும், வியானன் வலது சிறகும், அபானன் இடது சிறகும், ஆகாயம் (சமானவாயு) ஆத்மாவு (மத்திய பாக சொரூபமுமாம். பிருதிவி புச்ச (வால்) வடிவப் பிருதிஷ்டையாம். ஏதனால் தேகத்தின் கனிருத்தல் வடிவ பிராணனுக்குப் பிருதிவி வடிவ தேவதை ஸ்திதிக்கு ஏதுவா யிருத்தலின் தாரணஞ் (கிரகித்துக் கொள்ளுதல்) செய்வதாயிருக்கின்றதோ அதனுல் பிரதிஷ்டையாம். இது கிரியாசத்தியுள்ள காரிய ரூபம்.

ஞானேந்திரியங்களைந்தும், மனமாகிய ஆறுதத்துவங்களும் (சித்தமும்) சேர்ந்து மனோமயகோச மெனப்படும். இம் மனோமய வடிவப் பட்சிக்கு எசுர்வேதமே சிரமும், இருக்கு வேதம் வலது சிறகும், சாமவேதம் இடது சிறகும் ஆதேஷம் (உபநிஷத் முதலிய பிராமண பாகம்) ஆத்மாவாம். அதர்வண வேதம் புச்ச வடிவ பிரதிஷ்டையாம். எழுத்துக்கள் உச்சாரணத்தின் பிரயத்தனம் நாதம் ஸ்வரம் என்னுமிவற்றால் நிறைந்த பதத்தினையும், வாக்கியத்தினையும் விஷயஞ் (பொருள்) செய்வதாகிய அவற்றின் (ஸ்தான முதலியவற்றின் பாவனையுடைய மனத்தின்) விருத்தி எதுவோ அது சுரோந்திர வாயிலாக எசுர்வேதத்தின் சங்கேதத்தால் விசிட்டமாய் எசுர்வேதமென்று சொல்லப்படுகிறது. இவ்வாறே இருக்கு வேதமுளது இவற்றால் மந்திரங்களுக்கு மனோவடிவத் தன்மையுளதாக



மனதின் விருத்தியே ஆவர்த்தனஞ் செய்ய (திருப்ப)ப் படுகிறது. இதனால் மானச செபம் சம்பவிக்கிறது. இவ்வாற்றால் மனோமய கோசத்திற்கு வேதரூபத்தன்மை தைத்திரீயத்தில் சொல்லப்படுகிறது. இது இச்சா சக்தியுள்ள காரண ரூபம் (கருவி)



ஞானேந்திரியங்களைந்தும், புத்தியுமாகிய ஆறு தத்துவங்களும் (அகங்காரமும்) சேர்ந்து விஞ்ஞானமயகோச மெனப்படும். இந்த விஞ்ஞானமையகோச வடிவப் பட்சிக்குச் சிரத்தையே சிரமாம். ருதம் (சத்தியம் பேசுவதற் கேதுவான விருத்தி) வலது சிறகாம், சத்தியம் (சமதரிசனம்) இடது சிரகாம். யோகம் (சித்த வொருமையே) ஆத்மாவாம். மக தத்துவம் (சமஷ்டி புத்தி) புச்ச ரூப பிரதிஷ்டையாம் (கொடிக்கு ஆதாரமாகிய பிருதிவியினைப் போலப் புத்திக்கு ஆதாரமாம்) ஈண்டு மனோமயத்திற்கு வேதரூபத் தன்மையும், விஞ்ஞானமயத்திற்கு சிரத்தாதி வடிவத் தன்மையும் சொல்லப்பட்டது. அது அதிகாரியின் மனபுத்திகளால் நிகழ்வதாயிருத்தலின் சொல்லப்பட்டதாம். இது ஞான சக்தியுள்ள (செய்பவன்) கர்த்தா ரூபம்.

பிராணமயகோசம் கேவலம் (தனித்த) இரஜோ குணாவஸ்தையாம். மனோமயகோசம் இரஜோ குணத்தோடு கூடிய சத்துவ குணாவஸ்தையாம். விஞ்ஞானமயம் கேவலம் சத்துவகுணவஸ்தையாம் இம் முக்குணாவஸ்தையின் பேதத்தால் ஒரே லிங்கதேகம் (சூக்ஷ்ம சரீரம்) மூன்று கோசங்களாக (பிராணமயம் மனோமயம், விஞ்ஞானமயம்) கற்பனை செய்யப்பட்டது.

ஆத்மாவின் சொரூபவடிவ ஆனந்தத்தின் பிரதிபிம்பத்தோடு கூடிய பிரிய மோதப் பிரமோத வடிவ விருத்திகளின் லயத்திற்கு (ஒடுக்கத்திற்கு) ஸ்தானமாகிய காரண தேகமெதுவோ, அது ஆனந்தமயகோச மெனப்படுகிறது. இஷ்ட விஷயத்தின் தரிசனத்தால் உண்டாகும் விருத்தி பிரியமாம் அதன் லாபத்தால் (அடைவதால்) உண்டாகும் விருத்தி மோதமாம். அதன் போகத்தால் (சரீரசம்பந்த அனுபவத்தால்) உண்டாகும் விருத்தி பிரமோதம் விருத்தியா

இவ்விருத்திகள் ஜாக்கிர சொப்பனங்களில் புண்ணிய கர்மத்தின் பலமாகிய சுகத்தின் போக காலத்திற் றோன்றி அப்புண்ணிய பல போகத்தின் அபாவ (இருப்பின்மை) காலத்தில் அவ்விருத்திகள் தமது காரணமாகிய அஞ்ஞானத்தில் ஒடுங்குகின்றன. அவ்வஞ்ஞானம் ஆனந்தமய கோசமாம். இவ்வானந்தமயகோச வடிவ பட்சிக்குப் பிரிய விருத்தி சிரம்.

மோத விருத்தி, வலது சிறகாம். பிரமோத விருத்தி இடது சிறகாம். இவ் விருத்திகளின் பிரதிபிம்ப வடிவ விஷயானந்தம் இதன் ஆத்மாவாம். பிம்பமாகிய ஆனந்தவடிவப் பிரஹ்மம்புச்ச வடிவப் பிரதிஷ்டையாம் (ஆதாரமாம்) இது போக்தா ரூபம்.

ஈண்டு அன்னமய கோசத்திற்கு சிறகுவால் முதலியவற்றிற்குச்சமானமான அவயவங்கள் பிரசித்தமாம். அதனதுபக்ஷித் தன்மையின் உருவகமும் பிரசித்தமாம். கருவில் விடப்பட்ட உருக்கிய தாம்பரத்தின் பிரதிமை போல பிராணமய முதலிய கோசங்களுக்கு உருவகம் சித்திக்கிறது. கோசங்களின் பக்ஷியின் ஆகாரத்தைக் கற்பித்தவ் எதுவோ அது பாகிய (வெளி) விஷயங்களின் ஆசத்தி (ஆசை)யை நிஷேதித்தற் (தள்ளுதற்) கேதுவான புத்தியை ஆத்மாவில் நிறுத்துதற் பொருட்டாம்.

அது எப்படி யெனில் யாது யாது பாகியம் அது அது அனாத்மா. யாது யாது ஆந்தரம் அது அது ஆத்மா, (பிராணனின்றி தேகம் நிலையாது சங்கற்ப விகற்ப மனமின்றி பிராணனசையாது, பிரபஞ்ச ஞானமின்றி மனமில்லை, அஞ்ஞான காரிய ரூபமின்றி உலக ஞானமில்லை; அதனால் ஆத்மாவாம்) வென்னும் தாற்பரியத்தால் தார புத்திராதிகளைக் குறித்து அன்னமயன் ஆத்மா; அன்ன ரஸ மயனைக் குறித்து தார புத்திராதிகள் அனாத்மா; அப்படியே மற்ற கேசங்களுக்கும் அறிக. அன்ன ரஸ மயாதி கோசங்களுக்குள் ஆந்தர ஆந்தர கோசத்தைக் குறித்து பாகிய பாகிய கோசங்கள் அனாத்மா. ஆதலே யன்றி கோச ரூபமாகவு மிருக்கின்றன. அது பிராணமயத்துக்கு அன்ன ரஸ மயன் கோசமாயிருப்பது போலும் கோசத்தில் தாதான்மிய (கற்பித பேதமும் வாஸ்தவ அபேதமும் கூடியது) ஆன்மாவையே இங்கு கோச சப்தத்தால் கூசிறர். இவ்வாறு கோசங்களை ஒன்றுக் கொன்று விலக்ஷணாந்தர பூர்வமாகக் கூறியது அவற்றி னுபாசனார்த்த மன்று; மற்றோ கோச வியல் பறிந்து அவற்றின் விசார பூர்வகம் அவற்றிற்கு ஆந்தர விலக்ஷண ஆதார பூநமான ஆத்ம சாக்ஷாத் காரத்திற்கேயாம்.

---

அன்னமயகோசம் காரியமாதலால், பிராணமயகோசம் ஜடமாதலால், மனோமயகோசம் கருவியாதலால், விஞ்ஞான மயகோசம் ஒடுங்கி இல்லாமல் போகும் காலங்களையுடையதாதலால், ஆனந்தமய கோசம் (தாற்காலிக) ஒரு போதயதாதலால் (அசத்து, சடம், துக்கவடிவமாதலால் பஞ்ச கோசங்களும்) ஆத்மா வன்று.

| காரணர்-தேவதை | சூக்ஷ்ம சரீரம் 20 | ஸ்தூல சரீரம் கோளகம் | காரியம் - தொழில் |
|---|---|---|---|
| | அந்தக் கரணம் | | |
| சதாசிவம் | உள்ளம் | சிரம் | தரித்தல் |
| சத்திரன் | மநம் | கண்டம் | சங்கற்ப விகற்பம் |
| பிரம்மா | புத்தி | இருதயம் | நிச்சயம் |
| விஷ்ணு | சித்தம் | நாபி | ஸ்மரணை |
| உருத்திரன் | அகங்காரம் | சர்வாங்கம் | அபிமானம் |
| | வாயுக்கள் 5 | | |
| விசிட்டன் | வியானன் | சர்வாங்கம் | தாங்குதல் |
| விசுவகர்த்தா | பிராணன் | இருதயம் | உசுவாச நிசுவாசம் |
| விசுவயோனி | அபானன் | குதம் | சீரணிப்பித்தல் |
| அசன் | சமானன் | நாபி | இழுத்துச் செல்லல் |
| சயன் | உதானன் | கண்டம் | கடைதல் |
| | ஞாநேந்திரயம் 5 | | |
| திக்கு | சுரோத்திரம் | செவி | சப்தக் கிரகணம் |
| வாயு | துவக்கு | மெய் (தோல்) | ஸ்பர்சக் கிரகணம் |
| சூரியன் | சட்சு | கண் | உருவக் கிரகணம் |
| வருணன் | சிங்வை | நாக்கு | இரஸக் கிரகணம் |
| அசுவினி குமாரர்கள் | ஆக்கிராணம் | மூக்கு | கந்தக் கிரகணம் |
| | கர்மேந்திரியங்கள் 5 | | |
| அக்கினி | வாக்கு | வாய் | வசனித்தல் |
| இந்திரன் | பாணி | கை | கிரகணப் பரித்தியாகம் |
| சூரியன் | பாதம் | கால் | கமனாகமனம் |
| இயமன் | பாயுரு | எருவாய் (குதம்) | மல விசர்ச்சனம் |
| பிரஜாபதி | உபஸ்தம் | கருவாய் (குய்யம்) | ஆனந்தித்தல் |

உ
சிவமயம்

# 4. மறைப்பை நீக்க மறை ஈறு காட்டும் வழி

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியையுள் நாடு,

இறைவன் படைப்பில் ஐந்து அறிவுரை பெற்றுள்ள ஐவகை அக்றிணை உயிர்களைவிடப் பகுத்துப் பார்க்கும் ஆறாவது அறிவு பெற்றுள்ள உயர்திணை உயிராகிய மனித சரீரம் பெற்றுள்ள ஜீவனே மிக்கோன் ஆவன். இந்தச் சீவனின் இலட்சியம் துக்கக் கலப்பில்லாத பேரின்பம் பெற்று அழியாப் பெறுவாழ்வு அடைந்து நிலைத்து இருத்தலேயாகும்.

மூன்று உலகங்களிலும் உள்ள(தேவர், மனிதர், நடப்பன,நீந்து வன, பறப்பன, ஊர்வன, நிர்ப்பன) எழுவகைப் பிறப்புகளை யும் படைத்துக் காத்து அழித்து மறைத்து அருளும் ஐந்தொழில் களை இயல்பாகக் கொண்டுள்ள இறைவன், மாயா விஷிட்ட சேதனமாகிய காரணப் பிரம்மம் ஆம். இந்த ஈஸ்வரனின் அதிஷ்டான (ஆதார) சேதனம், சத்து சித்து ஆனந்தம் நித்தி யம் பூரணம் என்னும் ஐந்து தன்மைகளைக் கொண்ட ஒரு பரப்பிரம்ம சொரூபமாகும் என்று இருக், யஜுர். சாமம், அதர்வனம் ஆகிய நமது இந்து மதத்தின் நான்கு வேதங் களின் அந்தமான உபநிஷதங்கள் (மறை ஈறுகள்) கூறு கின்றன. அதே வேதாந்தம், மேலே சொன்ன மனித ஜீவர் களின் அதிஷ்டான (ஆதார) சேதனம் ஆகும் என்றும் கூறு கிறது. ஆனால், ஜீவர்களாகிய நம்மிடத்தில் சத்துசித்து ஆனந்தம் நித்தியம் பூரணம் ஆகிய பிரம்ம சொரூபத்தின் ஐந்து தன்மைகள் காணப்படவில்லை! மாறாக, மாயையின் தன்மைகளான அசத்து சடம் துக்கம் அனித்தியம் கண்டம் ஆகிய பாவனைகளே அனுபவத்திற்றிடமாக உள்ளன. இதனால், பிறப்பு இறப்புக்களில் புண்ணிய பாவமிசிரங்களைச் செய்து அவற்றின் பயன்களான சுவர்க்க நாகங்களில் சுக துக்கங்களை அனுபவித்து மீண்டும் புண்ணிய பாவகலப்பு (மிசிரம்) அனுபவிக்க சம்பாதிக்க மறுபடியும் பிறந்து சுகதுக்க முடைய வாழ்க்கைகளையே உடையவர்களாய் இருப்பது அனைவருக்கும் அனுபவமாகும்.

மேலே கூறிய உண்மையான சத்து முதலிய ஐந்து தன்மைகளைப் பொய்யான அசத்து முதலிய ஐந்து தன்மைகள் மறைப்பு செய்கின்றன. அது எப்படியெனில் கூறுதும்:-

நமது தூல சரீரம்:- சருமம் (தோல்) உதிரம் (இரத்தம்) மாமிசம் (சதை) சநாயு (நரம்பு) அத்தி (எலும்பு) மஜ்ஜை (கொழுப்பு) என்னும் ஆறுதத்துவங்களைக் கொண்டது ஆகும்.



சூட்சும சரீரம் 20 தத்துவங்களாயிருக்கும். அதாவது; உள்ளம், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய ஐந்தும் அந்தக்கரணம் (தூல சரீரத்திற்கு உள் கருவி)என்பர். சுரோத் திரம் (செவி) துவக்கு (பரிசம்) சட்சு (கண்) சிங்குவை (நாக்கு) ஆக்ராணம் (மூக்கு) ஆகிய ஐந்தும் ஞானேந்திரியங்கள் (அறி கருவிகள்) என்பர். வியானன், பிராணன், அபானன், சமானன் உதானன் ஆகிய ஐந்தும் வாயுக்கள் என்பர். வாக்கு, பாணி, (கை) பாதம், பாயுறு (எருவாய்), உபத்தம் (கருவாய்) ஆகிய ஐந்தும் கருமேந்திரியங்கள் (தொழிற்கருவிகள்) ஆகும். தூலம் சூக்குமம் என்னும் இரு சரீரங்களுக்குக் காரணமாயிருப்பது ஆன அவித்தையே காரணசரீரம் என்பர். ஆக இது ஒன்றும், இவைகளில் நான் எனது என்னும் பாவனை கொண்டு வியவ காரங்களைச் செய்யாநின்ற சீவன் ஒன்றும், இந்தச் சீவனுக்கு அதிஷ்டானமாய் (ஆதாரமாய்) உள்ளது. மேலே கூறிய ஈஸ்வர அதிஷ்டான சேதனமாகிய எந்தப் பிரம்மமோ அதுவே ஆகும். ஆகத் தத்துவங்கள் 29 என்பது வேதாந்தத்தின் கோட்பாடு

[இது நாநா ஜீவவாதக் கட்டளையின் தத்துவ விளக்கம் ஆகும்]

மேலே கூறிய 3 சரீரங்களிலே ஐந்து கோசங்கள் உள் ளன. அஃது எங்ஙன் எனில் - 1 தூல சரீரமே அன்னமய கோசம் (அன்னத்தினலே உண்டாகி அதனலே விருத்தி அடைந்து அது இல்லாவிட்டால் கெட்டுப்போகிறபடியால் அன்னமய கோசம் என்பர்) 2 பிராணமய கோசம்: பிராணுதி வாயுக்களும் கர்மேந்திரியங்களும் சேர்ந்தது 3. மனதும் சித்த மும் ஞானேந்திரியங்களும் கூடியது மனோமயகோசம்: 4 புத்தியும், அகங்காரமும், ஞானேந்திரியங்களும் பொருந்தி யுள்ளது விஞ்ஞானமய கோசம். 5. காரண சரீரமும் பிரியம், மோதம், பிரமோதம் என்னும் மூன்று விருத்தி(எண்ணங்) களும் கூடியதே ஆனந்தமய சோகம்: இவைகளே பஞ்ச (ஐந்து) கோசங்களாம். கோசம் என்ருல் மறைப்பு. உடம்பை உடை மறைப்பது போலாம்.

நாம் (ஜீவர்கள்) சத்துத் தன்மை உடைவர்களே:
எப்படி என்ருல்

இப்போது நாம் (ஜீவர்கள்) சுகிகளாகப் போக பாக்கி யங்களை அனுபவிப்பதற்கும் அல்லது துக்கிகளாய்ப்போக பாக் கியங்கள் இன்மைக்கும் முன் சென்மங்களில் நாம் செய்த புண்ணிய பாவங்களே காரணங்கள் என்றும். ஆதலால், இனி

மேல் பாவங்களைச் செய்யாமல் புண்ணியங்களையே செய்தால் வரும் காலத்தில் சுகிகளாக இருப்போம் என்றும். சுருதி யுக்தி அனுபவத்தால் முடிவுசெய்கிறோம். எனவே சென்ற, நிகழ்வு, எதிர்வு, ஆகிய முக்காலங்களிலும் நாம் இருக்கிறோம் என்பது பெறப்படுகிறது மற்றும், கனவு நிலையிலுள்ள் ஜீவனே கனவு கண்ட பின் நனவு நிலைக்குவந்து நான் சொப்பனம் கண்டேன் என்பதாலும், கனவும் நனவும் இல்லாத சுழுத்தி (ஆழ்ந்த நித்திரை) யிலிருந்து நனவு நிலைக்கு வந்த உடன் நான் சுக மாய்த் தூங்கினேன், ஒன்றும் தெரியவில்லை, என்னும் அனுபவம் உள்ளதால் சாக்கிர (நனவு) சொப்பன (கனவு) சுழுத்தி ஆகிய மூன்று அவஸ்தை (காலங்) களும், மாறி மாறி வந்தாலும் மாறாத நான் இருப்பது கொண்டு, நாம் சத்துத்தன்மை உடையவர்கள் எனப்பெறப்படுகிறது. இப்படிப்பட்ட சத்து வடிவமான நம்மை பிராணமயம் என்றும் இந்த மூச்சு இருக்கும் வரைதான் என் வாழ்வு என்றும்; என்றைக்காவது நான்சாவது நிச்சயம் என்றும், பத்துத்திக்குகளில் அதிக்கிரமித்து ஒரு படித்தரமாக உள்ள ஆத்மா எங்கும் போக்குவரவு செய்ய முடியாத நிலை இருந்தும் நான் போகிறேன். வருகிறேன், கொடுத்தேன், வாங்கினேன், பேசினேன் என்பன முதலிய வியவகாரங்களைச் செய்வதன் மூலம் உண்மையான ஆத்மாவின் சத்துத் தன்மையை இந்தப் பிராணமயம் மறைக்கிறது.

மேலே கூறிய சுருதி யுத்தி அனுபவங்களைச் சீவன் தெரிந்திருக்கும் தன்மையே சித்து (அறிவு) எனப்படுகிறது.

விஞ்ஞான மயம்: புத்தியும் அகங்காரமும் ஞானேந்திரியங்களும் ஆகும், என முன்னே செல்லப்பட்டது. இவையின் புத்தியின் தொழில் நிச்சயித்தல் அகங்காரத்தின் தொழில் அபிமானித்தல். இந்தப் புத்தியானது முன்னே சொல்லப்பட்ட அதிட்டானமாகிய பிரம்மமே தனக்கும் அதிட்டானம் ஆம் என்று வேதாந்தம் சொல்லியிருக்க அதை நம்பாமலும், யுக்திக்கும் அனுபவத்திற்கும் ஒத்திருக்கும் மாறாத நானெனும் பொருளே அறிவு வடிவமாயிருப்பதென அறிந்து அதுவே நான் என நிச்சயித்து அபிமானம் செய்வதே உண்மை அறிவாய் இருக்க அறிவு அற்ற சடமான பஞ்சகோசங்களிலே எதையாவது ஒன்றை அவ்வப்போது நான் என நிச்சயமும், அபிமானமும் செய்வதால் நிச்சயத் தன்மையும் அபிமானமும் உடைய விஞ்ஞான மயம் ஆத்மாவிற்கு வேறான பஞ்சகோசங்களை நான் என நிச்சயிக்கும் எண்ணத்தால் ஆத்மாவின் அறிவுத் தன்மையை மறைக்கிறது.



அஃது எங்ஙன் எனின்:- அன்னமயமாகிய தூலசரீரத்தை நான் பருத்தேன். நான் இளைத்தேன், நான் கட்டையன், நான் நெட்டையன், நான் கருப்பன், நான் சிவப்பன். நான் பிறந்து இத்தனை வருடங்கள் ஆயின, நான் ஆண், நான் பெண் முதலியனவாகிய நிச்சயமும் அபிமானமும்; பிராண மயமாகிய வாயுக்களிடம் நான் பலவான், நான் பலஹீனன், நான் பசித்தவன் நான் ஜீரணித்தேன், நான் மூச்சுவிடுவேன், இழுப்பேன் எனவும் கர்மேந்திரியங்களிடம் நான் போனேன் நான் வந்தேன். நான் பேசினேன் நான் கொடுத்தேன், வாங்கினேன், முதலியன மூலம் நிச்சயமும் அபிமானமும், பிறகு நான் நல்லன எண்ணினேன் கெட்டன எண்ணினேன், கண்டேன், கேட்டேன், தொட்டேன், முதலியன மூலம் மனோமயத்துவங்களில் நான் என்ற நிச்சயமும் அபிமானமும். (விஞ்ஞானமயத்திற்கு மேலே கூறப்பட்டுள்ளது நான் அறிவேன் நான் அறியேன் என சீவனிடமும் அவித்தையிடமும் நிச்சயமும் அபிமானமும் ஆனந்தமயத்திடம் செய்வதே என்று யூகித்து அறிக.

ஆனந்தத்தன்மையை மறைப்பது எங்ஙன் எனின்:- மேலே சொல்லப்பட்ட அறிகருவிகள் (ஞானேந்திரியங்கள்) ஆகிய கண் காது முதலிய வழிகளில் வரும் சுகங்களைப் பார்த்தல் கேட்டல் முதலிய துக்க காரணப் பொருட்களில் இருப்பதாக நிச்சயித்தலைச் செய்வதால் தனது (ஆத்மாவின்) உண்மையான ஆனந்த வடிவத் தன்மையை மறைக்கிறது. அதாவது புறத்தே ஆனந்தம் இருப்பதாகக் காட்டி அகத்தே உள்ள ஆனந்தத்தை மறைப்பதனால் ஆனந்த மய கோசம் எனப்படும்.

நித்தியத் தன்மையை மறைப்பது எங்ஙன் எனில்: அநாதியான ஆத்மாவாகிய தன்னை கர்மத்திற்கு ஈடாக பிறந்தேன் என்றும் நாசமற்ற தன்னைஎதிர்காலம் எப்படியோ தெரியவில்லை என்றும், எந்த வழியிலாயினும் தனக்கு மரணம் வருமே என்று மரணப்பயம் கொள்வதும், சத்து (இரும்பு) வடிவமாகிய தன்னை பிறந்து இறப்பவன் என்றும், பத்துத் திக்குகளிலும் ஆகாயம் போல நீக்கமற நிறைந்து இருக்கும் ஏகரூபப் பிரம்ம சொரூபமான தன்னை இந்த வீட்டில் குடியிருக்கிறேன் அந்த ஊரை விட்டு இந்த ஊருக்குக் குடியேறினேன் இந்த உலகம் முழுதையும் சுற்றிப்பார்த்தவன் என்றும் இவ்வாறாக அநாதியாயும், நாசமற்றதாயும், சத்துரூபமாயும், ஏகரூபமாயும், உள்ள ஆத்ம நித்தியத் தன்மையை உணர்த்தும் நான்கு நிலைகளை இந்த மனோமயம் மேலே கூறிய விதமாகச் சங்கல்பம் விகல்பம்

(சாதக பாதக) எண்ணங்களைச் செய்வதன் மூலம் ஆத்மாவின் நித்தியத் தன்மையை மறைக்கிறது.

பூரணத் தன்மையை மறைப்பது எப்படி எனின்:- அன்னமயமாகிய தூல சரீரத்தையே நான், நான் (ஆத்மா) என்று நிச்சயித்து அபிமானிக்கின்றதால் சுமார் 5, 6, அடிகள் உயரமும் 50, 60, கிலோ என்கிற எடையும் 30-40-50, அங்குலம் சுற்றளவும் உள்ள துண்டுபட்ட (பரிச்சின்னமான) இந்தத் தூல சரீரமே நான் என்பதால் (அபரிச் சன்னமான) துண்டு படாது உள்ளும் புறமும் எங்கும் நிறைந்திருக்கும் ஆத்மாவின் பூரணத் தன்மையை மறைக்கிறது ஆகவே மேலே கூறின பிரகாரம் சத்து சித்து. ஆனந்தம், நித்தியம், பூரணம் என்னும் ஆத்மாவின் ஐந்து தன்மைகளை அசத்து, சடம், துக்கம், அநித்தியம், கண்டம் என்னும் ஐந்து கோசங் (மறைப்பு) கள் செய்கின்றன. இவ்வாறு சுருதி (நான்கு வேதம்) யுக்தி (பொருந்துமாறு நிரூபணம் செய்தோம்.

இனி அனுபவத்தைக் கூறுவோம் :-

எல்லாச் சீவர்களும் சொப்பனம் இல்லாத ஆழ்நிலை உறக்கத்தில் (சுழுத்தியில்) இருந்து நனவு நிலைக்கு வந்த பிறகு நான் சுகமாய்த் தூங்கினேன் ஒன்றும் தெரியவில்லை என்னும் அனுபவம் ஒருபடித்தரமாக உள்ளது என்று ஒப்புக்கொள்கின்றனர் இந்த அனுபவத்திலே இருந்த சீவன் சுகத்தை அனுபவிப்பதற்கு இந்தத் தூல சரீரமோ, சொப்பனத்தில் கண்ட சரீரமோ கண் முதலியன மூலம் அனுபவிக்கப் படும் தீபம் முதலிய பொருள்களோ இல்லை அதில் தான் (ஆத்மா) மட்டும் இருந்ததாகத் தோன்றுகிறதே அன்றி நம்முடைய நண்பர்களோ, உறவினர்களோ. மனைவி மக்களோ, இந்த வீடோ. ஊரோ இருப்பதாகத் தெரியவில்லை! இப்படிச் சுகத்திற்கு ஏதுவாகிய ஒரு பொருளும் இல்லாதிருக்கும் போது சுகானுபவம் இருப்பது என்றால் நான் எனும் ஆன்மா சுகவடிவமாக இருந்தாலன்றி சுகானுபவம் கிட்டாது என்பது அர்த்தாபத்தி வடிவ யுக்தி.

இப்படிச் சுகானுபவம் இருக்கிறது என்று கூறுவதற்கு அறிவு இருக்க வேண்டும் மேலே கூறிய பிரகாரம் எதுவும் இல்லாத நிலையில் சுகத்தை அறியும் அறிவு இருக்கிறதென்றால் நான் எனும் ஆன்மா அறிவு வடிவமாய் இருந்தாலன்றி அறிய முடியாதென்பது அர்த்தாபத்தி வடிவ யுகதி.



இந்தப் பிரகாரம் அறிவும் சுகமும் உடைய ஆத்மா இருப்புத் தன்மை இல்லையேல் ஷி சுகமும் அறிவும் பெறமுடியாது. ஆதலால் இருப்புத் தன்மையுள்ளதால் **சத்தும்**, அறியும்தன்மையுள்ளதால் **சித்தும்**, சுகம் இருப்பதால் ஆனந்தமும் நான்எனும் ஆன்மாவிற்கு உண்டு எனப்பெறப்படுகிறது. எனவே தானாகிய ஆத்மாசச்சிதானந்தம் என்பது யுக்தியுடன்கூடிய அனுபவமாம். "சத்தேகித்தாரு(ம்) (அய)லெனில்(அ)சத்தா(ம்) (அ)சத்தானாற் சாட்சி எங்கே, சித்தேசத்தாகும் அயலெனிற்சடமாஞ் சடங்களுக்குத் திதியுமில்லை. ஒத்தேதோன்றிய சத்துஞ் சித்து (ம்) நல்ல சுகமாகும் ஊகத்துக்கோர், வித்தேயந்நியமாகிற் சடமசத்தாஞ் சுகானுபவம் விளைந்திடாதே" எனக் கூறப்பட்டுள்ள கைவல்ய நவநீதம் 2–141–ம் பாட்டு சுருதிப் பிரமாணமாகும்.

ஓர் ஊரைப் பார்க்காமலோ அல்லது கேட்காமலோ அதைப் பற்றிய விபரம் ஒரு சிறிது கூடச் சொல்லமுடியாது. அதுபோல தான் ஐந்து இந்திரியங்களால் கண்டோ, கேட்டோ, தொட்டோ முகர்ந்தோ சுவைத்தோ அனுபவியாது உள்ளவைகளைப் பற்றிச் சிறிது கூடச் சொல்ல முடியாது. எனவே அனுபவித்த சம்ஸ்காரத்தி (வாசனையி)லிருந்து உண்டாகிய ஸ்மிருதி(எண்ணம்)எப்படி உண்மையோ; அதே போல நாம் சுழுத்தியில் அனுபவித்த சச்சிதானந்த வடிவமே நமது (ஆத்மாவின்) உண்மை வடிவமென நிச்சயிப்பதே உண்மை நிலையாகும்.

"சுருதி யுக்தி யொத்ததுபோல் அனுபவமுங் கேள் சுழுத்திச் சுகவா னந்தம், மிருதிவடி வாதலிலவ் வானந்தமேயறிவாம் வேறங்கில்லை, கருது பிரளயஞ்சுழுத்தி யிரண்டிலுநீ யிருந்திருளைக் காண்கின்றாயே, இருதயத்திப்படி நோக்கி யேகபரி பூரணமா இருந்திடாயே! என்று 2-143-ம் பாட்டில் தாண்டவராய சுவாமிகள் கைவல்ய நவநீதமென்னும் நூலில் கூறுயுள்ளதைப் பார்க்க.

இந்தச் சச்சிதானந்தமாகிய தான் சுழுத்தியில் அனுபவிக்கும் இன்பம், சாக்கிர சொப்பன காலங்களில் ஞானேந்திரியங்கள் கர்மேந்திரியங்கள்மூலம்அனுபவிக்கும் விஷய இன்பங்களுக்குஅப்பாற்பட்டது அவ்விஷயஇன்பங்களைஅனுபவித்த பிறகு துக்கமோ அசதியோ வெறுப்போ ஏமாற்றமோ இழிவோ பயமோ. அதிருப்தியோ, வெட்கமோ, முதலியவற்றில் ஒன்றோ. பலவோ தாரதம்மியமாக இருப்பதைக் காணலாம். ஆனால், சுழுத்திச் சுகத்திலிருந்து நனவு உலகத்திற்கு வரும் போது அந்த இன்பத்தை விட்டுப் பிரிய மனமில்லாமல் தொடர்ந்து இன்னும் சிறிது நேரம் படுக்கையில் புரண்டுப்

படுத்து அந்தச் சுழுத்தி இன்பத்தின் தொடரான வாசனனுந் தத்தை அனுபவிப்பதிலிருந்து அது குறை வற்ற மேலான (பிரம்ம) ஆனந்தம் எனப் பெறப்படுகிறது. மேலும், இந்தச் சுழுத்திச் சுகம் எல்லாச் சீவர்களிடத்திலும் ஒரு படித்தர அனுபவமாகவே இருக்கிறதென்பது ஒப்ப முடிந்த உண்மையாகும் ஆகவே, நான் எனும் ஆன்மா வியாபக (பூரண) மாக எங்கும் ஆகாயம்போல நிறைந்திருந்தாலன்றி எல்லாச்சீவர்களுக்கும் எல்லாக் காலங்களிலும், எல்லா இடங்களிலும், ஒரே பிரகாரமாகச் சுழுத்திச் சுகம் கிட்டாது என்பது யுக்தி. இன்னும் கைவஸ்யம் 2–166ல். "நிறைந்தவா றெந்தவாறு நிலைதெரிந் திலேனென்ருயேல், அறிந்ததாஞ் சுழுத்தி தன்னில் ஆனந்தம் அதுவேயாகும், குறைந்ததற் கானந் தந்தான் குவலயந் தன்னில் இல்லை நிறைந்ததே யிந்த ஆத்மா நிதானமிவ் வறிவு தானே" என்னும் சுருதிகூறுகிறது. எனவே, நான் என்னும் ஆத்மா **பூரணம்** என்பது நிச்சயிக்கப்படுகிறது.

இதுகாறும் செய்தவிசாரணையால் நான் எனும் ஆத்மா எங்கும் நிறைந்த பூரணமாய் இருக்கின்ற **ஒரே பொருள்** எனப்பெறப்படுகிறது. சுருதியும் உறுதிப்படுத்துகிறது. ஆகவே பரிபூரணமாய் இரண்டாவது இல்லாத ஒருவஸ்து எனபதால் அது அழிவதற்கோ, அழிப்பதற்கோ எந்தச் சாதனமும் இன்மையால் **நித்தியம்** எனப்படுகிறது.

தேகாதி நாமரூபப் பிரபஞ்சமோ அசத்து, சடம் துக்கம், அநித்தியம், கண்டம் என்பதால் அது **பொருள் அல்ல** நிழல் போல வெறும் தோற்றமே ஆகும். இப்படிச் சுருதியுக்தி அனுபவத்தால் அறிதற்கு குருசாஸ்திரங்கள் மூலம் கேட்டுச் சிந்தித்து விசாரம் செய்த பிறகு உண்டாகிற இந்த அகண்டாகார விருத்தியி (எண்ணத்தி)னுல் சுழுத்தியில் "ஒன்றும் தெரியவில்லை" என்னும் அறியாமையாகிய இருள் நாசம்அடைகிறது.

எனவே, சத்து, சித்து, ஆனந்தம், நித்தியம், பூரணம், என்னும் ஆத்மாவின் தன்மைகளை அசத்து, சடம், துக்கம், அனித்தியம், கண்டம் எனும் அனுத்மாவின் தன்மைகளால் உண்டான மறைப்பு நீக்கப்படுகிறது.

இதனுல், சர்வ துக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்திரூப முக்கியப் புருஷார்த்தமான முக்திப் பயனை சீவன் பெற்று இந்தச் சரீரத்திலேயே, இந்தப் பிறவியிலேயே இருக்கின்ற இடத்திலேயே அடைந்து உய்வான். இது சத்தியம்.

இது மெய்யே.

ஆனந்தாஸ்ரமம்
குமாரபாளையம்
சேலம் மாவட்டம்

வேணும் ஸ்ரீ சற்குருநாதன் துணை
**சோம. கோபால சுவாமி**

## 5. ஆத்மசாதகன் ஆரம்ப விசாரணை

**1.** கடவுள்; பரமபுருஷர்; பரப்பிரஹ்மம்; ஆத்மா; சர்வசாக்ஷி; அதீதசைதன்யம்; அறிவு; ஆனந்தம்; ஞானஜோதி; ஓம்.

**2.** சுத்தப் பிரஹ்மம் சுத்த சக்தி; அக்ஷரன் க்ஷரன்; ஜடம் சேதனம்; பரமாத்மா ஜீவாத்மா; புருஷன் பிருகிருதி; சிவம் சக்தி; மயாரஹிதன் மாயா சஹிதன்; அக்கினி உஷ்ணம்; பொருள் நிழல்; பால் வெண்மை; நாணயத்தின் இருபக்கங்கள்; இருடிகள்; உயிர் உடல்; பரமானந்தப் பிராப்தி சர்வதுக்க நிவர்த்தி; ஈசுரகிருபை தன் மானிட முயற்சி; பரா–அபரா; பரலோகம் இகலோகம்; சிரேயஸ் பிரேயஸ்; சுருங்குதல் விரிதல்; ஞானி குரு; தாய் தந்தை; அறிவு ஆற்றல்; ஸத்யம் ருதம்; ரயி (உருவம்) பிராணன்; நாடீ பந்தம் அபிமானம்; ராகம் துவேஷம்; யோகி போகி; அமிர்தம் மலம்; ஜீவன் அவித்தை; அகம் புறம்; புண்யம் பாபம்; ஈசுரன் பிரமம்; இன்பம் துன்பம்; இஷ்டம் பூர்த்தம். ரா ம்.

**3.** சுத்த தமஸ் சுத்த ரஜஸ் சுத்த சத்துவம்; கூடஸ்தர் காரியப் பிரஹ்மம் காரணப் பிரஹ்மம்; சத்ரூப சக்தி சித்ரூப சக்தி ஆனந்த ரூப சத்தி; சர்வ வியாபகம் சர்வப் பிரகாசம் சர்வானந்தம்; பரிபூரணன் தேஜோமயர் பரமானந்தர்; விராட்டு இரணிய கர்ப்பம் அவ்யாகிருதம்; சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரம்; வைசுவாநரன் சூத்ராத்மா அந்தர்யாமி; ஸ்தூலம் சூக்ஷமம் காரணம்; ஜாகரம் சொப்பனம் சுழுத்தி; விசுவன் தைஜசன் பிராக்ஞன்; வியவகாரிக ஜீவன் சொப்பன கற்பிதன் பாரமார்த்திக ஜீவன்; ஜாக்கிர சாக்ஷி; சொப்பன சாக்ஷி சுழுத்தி சாக்ஷி; ஜீவாத்மா அந்தராத்மா பாரமாத்மா; தத் துவம் அஸி; அது (பிரஹ்மம்) நீ (ஜீவன்) ஆகிருய் (இருக்கிருய்) ஓம் தத் சத்; சத் சித் ஆனந்தம்; உடல் மனம் ஆத்மா; தனி உயிர் இறை; சகத் ஜீவன் ஈசுரன்; பாசம் பசு பதி; ஜகத் ஜீவன் பரம்; இருப்பது அறிவது சுகமாயிருப்பது; கட்டுண்டவர் விடுபட்டவர் நித்தியர்; குரு லிங்கம் சங்கமம்; அடியார் குரு ஈசுரன் ஸ்பரிசம் நயனம் மானசம்; அத்யாத்மம் அதிபூதம் அதிதெய்வம்; வெளி வியாபாரம் இடை வியாபாரம் உள் வியாபாரம்; நம்மிடையே சூழ்நிலையில் தெய்வத்தால்; சரீரத்ரயம் சிதாபாசன் சாக்ஷி சைதன்யம்; அகர்மம் கர்மம் விகர்மம்; அதமம் மத்திமம் உத்தமம்; சென்ற காலம் நிகழ் காலம் எதிர் காலம்; இருக் யஜுர் சாமம்; காயத்ரீ திருஷ்டுப் ஜகதீ; உப நிஷத்துக்கள் பகவத் கீதை பிரஹ்ம சூத்திரம்; பதஞ்சலி யோக சூத்ரம் வியாசர் பிரம்ம சூத்ரம் நாரதர் பக்தி சூத்திரம்; ஸ்ரீ விஷ்ணு

ஸகஸ்ர நாமம் பகவத் கீதை ஸநந்ஸுஜாதீயம் (தமஸ் குணமுடையோர்க்காக); பிரம்மா விஷ்ணு ருத்திரன்; ஈசுரன் மாயை பிரம்மம்; பிரம்மம் அவித்தை ஜீவன்; ஈசுரன் பிரம்மம் ஜீவன்; படைத்தல் காத்தல் சம்ஹரித்தல்; கர்மகாண்டம் உபாஸனு காண்டம் ஞானகாண்டம்; மனத்தூய்மை சஞ்சலநிவர்த்தி மறைப்பை ஒழித்தல்; த்வைதம் விசிட்டாத்வைதம் அத்வைதம் துவைத விருத்தி சாக்ஷி விருத்தி அகண்டாகார விருத்தி; தூய பக்தி பிரேமை பக்தி மஹாபாவம்; கோஷ்டாக்கினி தர்ச்சனுக்கினி ஞானுக்கினி; கண் மனது இருதயம்; யக்ஞம் தானம் தவம் யக்ஞம் அத்தியயனம் தானம்; தாம்யத தத்த தயத்வம்; அடக்கமுடைமை தானம்செய்தல் தயையுடன்இருத்தல்; தேவர் மானுடர் அரக்கர்; தெய்வீகதபஸ் காமியதபஸ் அசுரதபஸ்; மார்க்கண்டேயன் துருவன் ராவணன்; ஆண் பெண் அஃறிணை; ஜல்பம் விதண்டை வாதம்; சிருஷ்டி திருஷ்டி வாதம்; மூர்த்தி ஸ்தலம் தீர்த்தம்; மனம் வாக்கு காயம்; ஸ்ருதி யுக்தி அனுபவம்; தாரணை தியாணம் சமாதி; இனம் சமயம் மொழி; வென்று வாழ்தல் வகுத்து வாழ்தல் வழங்கி வாழ்தல்; காலம் தேசம் வர்த்தமானம்; மானுடர் பசுபக்ஷி மரம்செடி; அமைதி பொறுமை வைராக்கியம்; சுறுசுறுப்பு அஞ்சாமை அன்பு; பணிவால் பரிவு மிகுந்த கேள்வியால் சேவையால்; வணங்கி பாடி சிந்தித்து; அன்பு அறிவு ஆற்றல்; விந்துவாய் புகுத்தல் குழந்தையாய் பிறத்தல் வாழ்ந்து முடிந்து அவ்வுலகில் புகுதல்; ராகம் துவேஷம் மோகம்; காமம் வெகுளி மயக்கம்; ஆணவம் கன்மம் மாயை; சோம்பல் பயம் வெறுப்பு; சூது பொய் வஞ்சனை; பிரியம் மோதம் பிரமோதம்; பார்த்த சுகம் அடைந்த சுகம் அனுபவித்த சுகம்; பூரகம் கும்பம் இரேசகம்; ஒளிபொருள் நிழல்; எண்ணங்கள் சொற்கள் செயல்கள்; தந்தை சொல் மந்திரம் கற்பின் திறம் கர்மகதி: பக்தி ஞானம் வைராக்கியம்; முருகா; ஸ்ரீ ராம்;

**4.** இருக் வேதம் யஜுர் வேதம் ஸாமவேதம் அதர்வன வேதம்; பிரக்ஞானம் பிரஹ்மம் அயம் ஆத்மா பிரஹ்மம் தத்துவம் அஸி அஹம் பிரஹ்மாஸ்மி; அகண்ட நிலை சூக்ஷ்மநிலை காரண நிலை அதீத நிலை; ஜாக்ரம் சொப்பனம் ஸுஷுப்தி துரியம்; சிவம் சக்தி நாதம் விந்து; சாலோகம் சாமீபம் சாருபம் சாயுச்சயம்; கிரேதா யுகம் திரேதா யுகம் துவாபர யுகம் கலியுகம்; கபிலர் தத்தாத்திரேயர் வியாசர் சங்கரர்; அநாதியாய் நாசமற்றதாய் சத்து ரூபமாய் ஏக ரூபமாய்; கருப் பையில் முட்டையில் வியர்வையில் பூமியைப் பிளந்து; பிரத்யட்சம் அனுமானம் உபமானம் வேதம்; சத் சித் ஆனந்தம் அறிவு; காலம் தூரம் வேகம் பருமன்; பூரகம் கும்பம் ரேசகம் சூன்யகம்; முன் பின் ஒன்றில்ஒன்று முற்றும்; பூ புவ: ஸுவ: மஹ:; ஆசாரியன் சிஷ்யன் வித்தைஉபதேசம்; தாய் தந்தை பிரஜை பிறஜஜனம்; தாய் தந்தை குரு அதிதி (தெய்வம்); ஆனந்தம் அறிவு கருமம் பரன்; மந்தன் மத்திமான் தீவிரன் தீவிரதரன்; பிராம்மணன் க்ஷத்திரியன் வைசியன் சூத்திரன்; ஞானி யோகி ஓதுவார் தொண்டர்; அமைதி பொறுமை வைராக்கியம் சமாதி; சுறுசுறுப்பு அஞ்சாமை அன்பு விழிப்பு; கடமை காலம் இடம் ஆராய்தல்; முகமலர்ச்சி ஈகை இன்சொல் இகழாமை; தவம் பிரம்மச்சரியம் சிரத்தை வித்தை; உத்பத்தி வரவு இருப்பு ஆட்சி; பிராணன் ஜ்வாலை ஸமித்து ஹோமம்; பிரம்மச்சரியம் ஞானம் தவம் ஸத்தியம்; மூலாதரரத்தில் பராவடிவம் ஸ்வாதிட்டானத்தில் பச்சயந்தீ அனாகதத்தில் மத்யமா கண்டத்தில் வைகரீ; அறம் பொருள் இன்பம் வீடு; பொருமை ஆசை சினம் கடுஞ்சொல்; சோம்பல் பயம் வெறுப்பு தூக்கம்; நாணமை ஆராயாமை முறிந்த சொல் செயல் பேணமை; பெயர் புகழ் அதிகாரம் செல்வம்; கணபதி; ஓம் சக்தி; ஆதித்ய;

**5.** சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் கந்தம்; ஆகாயம் காற்று அக்கினி ஜலம் பூமி; உள்ளம் மனம் புத்தி சித்தம் அகங்காரம் வியானன் பிராணன் அபானன் சமானன் உதானன்; செவி சர்மம் (தோல்) கண் நாக்கு மூக்கு; வாக்கு பாணி (கை) பாதம் பாயுறு (எறுவாய்) உபஸ்தம் (கருவாய்); சூன்யம் சலனம் உஷ்ணம் குளிர்ச்சி திண்னம்; இரக்ஷிக்கும் விஷ்ணு சிருஷ்டிக்கும் பிரம்மா சம்ஹரிக்கும் ருத்திரன் மறைக்கும் ஈசானன் அருளும் சதாசிவம்; சத்து சித்து ஆனந்தம் நித்தியம் பூரணம்; தேவ யக்ஞம் பித்ரு யக்ஞம் பூதயக்ஞம் மனுஷ்ய யக்ஞம் பிரம்ம யக்ஞம்; அதிலோகம் அதிஜ் யௌதிஷம் அதிவித்யம் அதிப்ரஜம் அத்யாத்மம்; பரமன் ஜீவன் ஜகத்திற்கு வழி அடையும் பயன் பயனுக்குத் தடை; அன்னமய கோசம் பிராணமய கோசம் மனோமய கோசம் விஞ்ஞானமய கோசம் ஆனந்தமய கோசம்; பிதிரர் தெய்வம் விருந்தினர் சுற்றம் தான் (தன் குடும்பம்); கொல்லாமை பொய்யாமை கள்ளாமை பிரம்மச்சரியம் ஏலாமை; மனத்தெளிவு அன்புடமை மௌனம் தன்னடக்கம் பரிசுத்த நோக்கம்; உடல் செய்பவன் இந்திரியங்கள் வாயுக்கள் கடவுள்; உயர்ந்தோர் பூஜை உடல் சுத்தம் நேர்மை பிர்மச்சரியம் அஹிம்சை; அஹிம்சை ஸத்தியம் அஸ்தேயம் பிரம்மச்சரியம் அபரிக்கிரகம்; பதவி முக்தி கிரம முக்தி விதேக

முக்தி கைவல்ய முக்தி; புஷ்பம் தீபம் தூபம் நிவேதனம் சந்தனம்; நக்ஷத்திரங்கள் சந்திரன் ஆதித்யன் வாயு அக்கினி; திசை மூலைகள் திசைகள் வானம் அந்தரீக்ஷம் பூமி; அதிஷ்டானம் உபநிஷதங்கள் மாயையின் தன்மைகள் பிரம்ம சொரூப தன்மைகள் கலப்புத் தன்மைகள்; அசத்து சடம் துக்கம் அனித்தியம் கண்டம்; சிரம் கண்டம் இருதயம் குதம் நாபி; பொன் நிறம் வெள்ளை சிகப்பு கருப்பு புகை நிறம்; சிதம்பரம் திருக்காளத்தி திருவண்ணாமலை திருவானைக்கா காஞ்சீபுரம்; சூரியன் சந்திரன் நக்ஷத்திரங்கள் மின்னல் அக்கினி; ஆகாயத்தில் மழையுடன் செடி கொடியில் புருஷ வீரியத்தில் ஸ்திரீ கருககுழில்; அருகம் புல் (பூமி மண்) மா விலை (நீர்) வாழை இலை (நெருப்பு) வேப்பிலை (காற்று) வெற்றிலை (ஆகாயம் ;துளசி அருகு வேம்பு வன்னி வில்வம்; நாளுக்கு இருமுறை மட்டும் உணவு கொள்ளுதல் குறைந்தது எட்டு டம்ளர் தண்ணீர் அருந்துதல் ஒரு மணி நேரம் தினம் உடற்பயிற்சி செய்தல் தினம் இருமுறையாவது பிராத்தனையில் ஈடுபடுதல் வாரத்தில் ஒரு நாள் உண்ணு நோன்பு கடைப்பிடித்தல்; தர்மம் தெரிந்தபிள்ளையாய் தாரத்தை தர்மத்தின் வழி காக்கும் மணாளனாய் நட்புக்கு இலக்கணமாய் பகைவனுக்கும் அருளும் உத்தமனாய் சரண் அடைந்தவர் எவரையும் காக்கும் விரதனால்; தத்துவச் சிறப்பு (ஹனுமான்) நட்பின் சிறப்பு (சுக்ரீவன்) பாதச்சிறப்பு (அகலிகை) யுத்தச்சிறப்பு (தசகண்டராவணன்) பாணத்தின்சிறப்பு(கடலரசன்);சிவாயசிவ

**6.** சர்மம் இரத்தம் சதை நரம்பு எலும்பு மஜ்ஜை (கொழுப்பு); மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அநாகதம் விசுக்தி ஆஞ்ஞை; காணபத்யம் கௌமாரம் சைவம் சாக்தம் சௌரம் வைணவம்; கணபதி சுப்ரமண்யம் சிவம் அம்பிகை சூரியன் விஷ்ணு; நியாயம் வைசேஷியம் மீமாம்ஸை சாங்கயம் யோகம் வேதாந்தம்; ஞானம் சக்தி பலம் ஐசுவரியம் வீரியம் தேஜஸ் (ஒஜஸ்); காரம் உவர்ப்பு துவர்ப்பு இனிப்பு கசப்பு புளிப்பு; குலம் கல்வி செல்வம் வயது ஆண் பெண்; தானம் தவம் வேதம் ஓதுதுதல் விடாமுயற்சி மஹாவிரதம் சங்கல்பம்; அன்னம் பிராணன் கண் காது மனம் வாக்கு; அன்பு பொறுமை ஈகை தெளிவு அடக்கம் இரக்கம்; காமம் குரோதம் மோகம் மதம் மாச்சரியம்; அன்னமயம் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் ஆனந்தமயம் சாந்தி; வசந்தம் கிரீஷ்மம் வருஷ சரத் ஹேமந்த சிசிர (ருதுக்கள்); ஜனனம் மரணம் பசி தாகம் சுகம் துக்கம்; பசி தாகம் மோகம் சோகம் மூப்பு மரணம்; பிறத்தல் இருத்தல் வளர்த்தல் மாறுதலடைதல் குறைவடைதல்



நாசமடைதல்; நமஸ்கரித்தல் ஆசிகூறுதல் சிந்தாந்தத்தை எடுத்துரைத்தல் பராக்கிரமத்தைப் புகழுதல் பெருமைகளைப் பேசுதல் பிராத்தனை செய்தல்; ஜீவகாருண்யம் சத்தியம் சுத்தம் குரு கடவுள் அபேதபத்தி வைராக்யம் பிரம்மஞானம்; ஆத்ம ஞானத்திலே திருப்தி ஆத்ம ஸ்வரூபமாக ஆய்விடல் பற்றொழிந்தல் பரமசாந்தர் இந்திரியங்களை அடக்கியவர் தீரர்கள்; லம் ஹம் யம் ரம் வம் ஸம்; சுப்ரமண்யம்; சரவண பவ;

**7.** பூ புவ: ஸுவ: மஹ: ஜன: தப: ஸத்ய; அதல விதல சுதல தராதல மஹாதல பாதாளவுலகம்; நித்தம் சுத்தம் புத்தம் முக்தம்சத்தியம்பரமானந்தம்அத்வைதம்;இந்திரியங்கள்சூக்ஷ்ம பூதங்கள் மனம் புத்தி ஸுத்ராத்மா மூலப்பிருகிருதி புருஷன்; வலது காது இடது காது வலது கண் இடது கண் வலது நாசி இடது நாசி வாய்; ஸ்வர்க்கம் சந்திர சூரியர்கள் திசைகள் வாயு வேதங்கள் ஆகாயம் பூமி; தலை கண்கள் காதுகள் மூச்சுக் காற்று வாக்கு இருதயம் பாதம்; தேவர் மனிதர் பறவைகள் மிருகங்கள் நாகர் கந்தர்வர் அசுரர்; தேவர் மனிதர் பறப்பன நடப்பன ஊர்வன நீந்துவன நிற்பன; வெண்மை சிகப்பு பச்சை மஞ்சள் பொன்நிறம் கருப்பு ஆனந்தா; பத்திரம் கோமுகம் பங்கயம் கேசரி சொந்திரம் வீரம் சுகாதனம்; கேட்டாலும் தொட்டாலும் கண்டாலும் உண்டாலும் முகர்ந்தாலும் சென்றாலும் தூங்கினாலும்; ஸ்பர்ச உணர்ச்சி மாத்திரமுடைய விருஷாதிகள் ஸ்பர்ச ரஸ வுணர்வுடைய இப்பி நத்தை ஸ்பர்ச ரஸ கந்தமறியும் கறையான் எறும்பு ஸ்பர்ச ரஸ கந்த ரூப மறியும் புழு வண்டு தும்பி ஸ்பர்ச ரஸ கந்த ரூப சப்த மறியும் விலங்கு பக்ஷி ஐந்துடன் பகுத்தறியும் அறிவுடைய மனிதர்கள் ஆறுடன் புத்தி விசேஷமுடைய ஞானி; வானம் காற்று அக்கினி ஜலம் பிருதிவி ஈசுரன் மாயை (வித்தை); ச ரி க ம ப த நி.

**8.** வானம் காற்று நெருப்பு நீர் பூமி ஈசுரன் மாயை பிரம்மம்; நிலம் நீர் தீ காற்று வானம் சூரியன் சந்திரன் ஜீவன்; பூமி ஜலம் அக்கினி வாயு ஆகாயம் மனம் புத்தி அகங்காரம்; சர்வஞ்ஞத்துவம் சர்வேஸ்வரத்துவம் சர்வேந்திரியத்துவம் சர்வ சக்தித்துவம் சர்வ காரணத்துவம் சர்வநியந்தரத்துவம் சர்வ வியாபகத்துவம் ஏகத்துவம்; ஒளி நிறைந்தவன் உருவில்லாதவன் உள்ளும்புறம்பும் ஒருங்கேயுள்ளவன் பிறவாதவன் பிராணனில்லாதவன்மனதில்லாதவன் பரிசுத்தன்மேலான அக்ஷரப்பிரஹ்மத்திற்கும் மேலானவன் (வேறானவன்); ஸ்வதந்திரம் தூயவுடல் தூயவுணர்வு முற்றுமுணர்தல் பாசங்களில்லா

திருத்தல் பேரருள் எல்லாம் வல்லசக்தி பேரின்ப முடைமை; ஆதிலக்ஷ்மி தான்யலக்ஷ்மி தைரியலக்ஷ்மி கஜலக்ஷ்மி சந்தான லக்ஷ்மி விஜயலக்ஷ்மி வித்யாலக்ஷ்மி தனலக்ஷ்மி; இயமம் நியமம் ஆதனம் பிராணுயாமம் பிரத்யரகாரம் தாரணே தியானம் சமாதி; மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அநாகதம் விசுக்தி மனோன்மணியம் ஆஞ்ஞை பிரம்மரந்திரம்; ஸ்தம்ப ஸ்வேத ரோமாஞ்ச ஸ்வரபேத வேபது வைவர்ண அச்ரு ப்ரலய; அனிமா மகிமா இலகிமா கரிமா (காமவஸாயிதா) பிராப்தி பிராகாமியம் ஈசத்துவம் வசித்துவம்; யக்ஞம் அத்தியயனம் தானம் தவம் ஸத்யம் பொறுமை தளராமை லோபமின்மை; தவம் அன்னம் பிராணன் மனது பஞ்சபூதங்கள் உலகங்கள் கர்மங்கள் பயன்; அன்பு அடக்கம் இரக்கம் ஈகை தெளிவு தைரியம் சுறுசுறுப்பு பொறுமை; மண் தண்ணீர் தாவரவர்க்கம் மனிதன் வாக்கு ருக்வேதம் ஸாமவேதம் உத்கீதம்; துக்கம் அசதி வெறுப்பு ஏமாற்றம் இழிவு பயம் அதிருப்தி வெட்கம்; கல்லாப்பிழை கருதாப்பிழை கசிந்துருகி நில்லாப்பிழை நினை யாப்பிழை நின் எழுத்தைச் சொல்லாப்பிழை துதியாய்ப்பிழை தொழாப்பிழை (மற்ற) எல்லாப்பிழை; அக்னிஹோத்திரம் தர்சம் பௌர்ணமாஸம் ஆக்ரயணம் அதிதிபூஜை ஔபாஸணம் வைச்வதேவ பூஜை சாஸ்திர விதி; ஓம் நமோ நா ரா ய ணு ய;

**9.** வலதுகாது இடதுகாது வலதுநாசி இடதுநாசி வலது கண் இடதுகண் வாய் எருத்துவாரம் கருத்துவாரம்; சூரியன் சந்திரன் செவ்வால் புதன் வியாளன் சுக்கிரன் சனி ராகு கேது; கோதுமை நெல் துவரைஉளுந்துகடலேஎள்ளு கொள்ளு பச்சைப் பயிறு மொச்சை; செந்தாமரை வெள்ளெலி சண்பகம்மந்தாரை முல்லே கருங்குவளே வெண் காந்தல் செவ்வல்லி வெண்தாமரை; தாமிரம் ஈயம் செம்பு பித்தளே பொன் வெள்ளி இரும்பு கருங் கல் துருக்கல்; மாணிக்கம் முத்து பவளம் பச்சை புஷ்பராகம் வைரம் நீலம் கோமேதகம் வைடூர்யம்; சந்தனம் சாம்பிராணி குங்கிலியம் கற்பூரம் ஆம்பல் லவங்கம் கருங்காலி கடுகு செம் மரம்; எருக்கு முருக்கு கருங்காலி நாயுருவி அரசு அத்தி வன்னி அருகு தர்ப்பை; சிவன் பார்வதி சுப்ரமணியர் விஷ்ணு பிரம்மா லக்ஷ்மி யமன் காளி விநாயகர்; ஜனனம் பசி தாகம் மோகம் சோகம் துக்கம் சுகம் மூப்பு மரணம்; மனத்தை அடக் குதல் புலன்களே வெல்லுதல் தவம் சுத்தம் பொறுமை நேர்மை ஞானம் அனுபவம் மறுபிறவி நம்பிக்கை; உண்மை பேசுதல் உண்மையாக நடத்தல் வேதாந்தக்கேள்வி அமைதிபுலனடக்கம் மனவடக்கம் ஈகை வேள்விசெய்தல் தவம் (உபாசித்தல்); சௌ ஔ ஹௌ கிரீம் கௌ ஐ இரீம் சிரீம் கிலீம்;



**10.** பின்னம் அபின்னம் பின்னுபின்னம் சத்து அசத்து சத சத்து சாவயவம் நிரவயவம் சாவயவநிரவயவம் அநிர்வசனீய பாவ பதார்த்தம் (மாயை இன்னதென்று சொல்லமுடியாது); கொல்லான் பொய்கூருன் களவிலான் எண்குணன் நல்லான் அடக்கமுடையான் நடுச்செய்யவல்லான் பகுந்துண்பான் மாசி லான் கட்காமம் இல்லான்; தபம் செபம் சந்தோடம் ஆத்திகம் தானம் கடவுள் விரதம் சித்தாந்தக் கேள்வி மகம் கடவுள் பூஜை மதிசொல்; மணி கடல் யானே புல்லாங்குழல் மேககரஜனே அணிவண்டு தும்பி சங்கு பேரிகை யாழ்; பூசித்தல் வாசித்தல் போற்றல் செபித்திடல் நற்றவம் வாய்மை அழுக்கின்மை நேசி த்தல் நீர்சுத்தி குற்றமற்றல்; மனிதர் மனிதகந்தர்வர் தேவகந் தர்வர் பிதிருக்கள் கர்மதேவர் முக்கியதேவர் இந்திரன் பிரகஸ் பதி பிரஜாபதி பிரம்மா; மந்திரங்கள் வாக்கு மனது ஸங்கல்பம் சித்தம் தியானம் விஞ்ஞானம் ஆத்மபலம் சிரத்தை சுகம்; ருக் யஜுர் ஸாமம் அதர்வவேதம் சிகைஷ கல்பம் வியாகரணம் நிருக் தம் சந்தசு ஜோதிஷம்; உள்ளம் மநம் புத்தி சித்தம் அகங்காரம் செவி தோல் கண் நாக்கு முக்கு; வியானன் பிராணன் அபானன் சமானன் உதானன் வாய் கை பாதம் எருவாய் கருவாய்; ஈசுரன் மாயை பிரம்மம் அவித்தை ஜீவன் உள்ளம் மனம் புத்தி சித்தம் அகங்காரம்;

**11.** இந்திரன் வருனன் மித்திரன் அரியமான் ஈசாளன் யமன் அக்கினி வாயு சூரியன் சோமன் பிரகஸ்பதி (ஆதிமூர்த் திகள்); குணம் ரூபம் பூஜை நினைவு சேவை நண்பன் செல்வன் காதலன் படைப்பவன் சோகம் பிரிவு

**12.** ஸத்யம் தவம் தமம் (புலனடக்கம்) சமம் (மனவடக் கம்) தானம் தர்மம் ஸந்தானவிருத்தி அக்கினி உபாஸனை (வேதம் ஓதுதல்) அக்கினி ஹோத்ரம் யக்ஞம் மானஸபூஜை ஸந் நியாசம்; மேஷம் ரிஷபம் மிதுனம் கடகம் சிம்மம் கன்னி துலாம் விருச்சிகம் தனுசு மகரம் கும்பம் மீனம்; மாதங்கள் பன்னிரண்டு;

**13.** பசுங்குழந்தை அறிவு கவிதை பசு நன்னடத்தை தியாகம் செய்யும் வீரன் நலம் விளேவிக்கும் செல்வம் செயல் திறமை புஷ்டியளிக்கும் உணவு ஆனந்தம் குடும்பத்தைக் காக் கும் தலேவன் நல்வாக்கு துயர்நீக்கும் நண்பன்;

**14.** பிறனில் விழையாமை உதாசீனம் (பொறுமை) சகிப் புத்தன்மை கிடைத்ததில் திருப்தி ஊழ் ஆராச்சி முறையாயீதல் வேத விதி விலக்கு ஆராச்சி அழுக்காருமை அன்பு அருள் தேகாத்ம புத்தியின்மை சேவை (நிஷ்காம கர்மம் உபகஸனே) பணிவு தெய்வபக்தி; இராகம் துவேஷம் குரோதம் காமம்

மோகம் உலோபம் மதம் மாச்சர்யம் ஈரிகைஷ (அன்புஇன்மை) அசூசை இடம்பம் தர்ப்பம் அகங்காரம் பயம்; இராவணன் இரணிய கசிபன் பகாசூரன் நரகாசூரன் தசரதன் துரியோதனன் கார்த்த வீரியார்ச்சுனன் சிசுபாலன் அருணுட்சதன் பௌண்டரீக வாசுதேவன் நபூரவமகாராசன் சதகண்டன் மதுகைடவர் கம்ஸன்

**15.** பிரதமை துவிதியை திருதியை சதுர்தி பஞ்சமி சஷ்டி சப்தமி அஷ்டமி நவமி தசமி ஏகாதசி துவாதசி திரியோதசி சதுர்த்தி பௌர்ணமி/அமாவாசை;

**16.** உணர்வு (ஸம்ஜ்ஞானம்) ஆட்சி (ஆஜ்ஞானம்) கலை ஞானம் (விஞ்ஞானம்) பகுத்தறிவு (பிரஜ்ஞானம்) அறிவின் கூர்மை (மேதை) மனக்கண் கொண்டு காணுதல் (திருஷ்டி) மனோதிடம் (த்ருதி) மனன சக்தி (மதி) நிச்சய புத்தி (மனீஷா) மனக்கலக்கம் (ஜூதி) ஞாபக சக்தி (ஸ்மிருதி) விருப்பம் (ஸங்கல்பம்) தீர்மானம் (க்ரது) பிராணசக்தி (அஸு) ஆசை (காமம்) விஷயங்களில் கவர்ச்சி (வசம்); பிராணன் சிரத்தை ஆகாசம் வாயு அக்கினி ஜலம் பிருதிவி இந்திரியம் மனது அன்னம் வீரியம் தவம் மந்திரங்கள் கருமம் உலகங்கள் நாமங்கள்; நோயின்மை கல்வி தானம் தான்யம் அழகு புகழ் பெருமை இளமை அறிவு சந்தானம் வலிமை துணிவு வாழ்நாள் வெற்றி வெற்றி ஆகும் நல்லூழ் நுகர்ச்சி; நாநா ஜீவ வாதக்கட்டளை கீதாசாரத்தாலாட்டு சசிவண்ண போதம் மஹாராஜத்துறவு வைராக்கிய சதகம் வைராக்கிய தீபம் இலட்சஞ விருத்தி வேதாந்த சூடாமணி கைவல்லிய நவநீதம் விவேக சூடாமணி ஸ்ரீமத் பகவத் கீதை ஸ்ரீமத் பிரம்ம கீதை அஞ்ஞானவதைப் பரணி பஞ்சதசி ஸ்ரீ ஞானவாசிட்டம்.

**18.** விஷ்ணு புராணம் பாகவதம் நாரதீய புராணம் கருட புராணம் பத்ம புராணம் வராக புராணம் பிரம்ம புராணம் பிரம்மாண்ட புராணம் பிரம்ம வைவர்த்த புராணம் பவிஷ்ய புராணம் வாமன புராணம் சிவ புராணம் லிங்க புராணம் ஸ்கந்த புராணம் மார்க்கண்டேய புராணம் அக்கினி/வாயு புராணம் மத்ஸ்ய புராணம் கூர்ம புராணம். ஆக ஆதி ஸத்வம் 6 + இராஜஸம் 5 + தாமஸம் 7 (புராணங்கள் **18**)

**36.** 1 வானம் 2 காற்று 3 நெருப்பு 4 நீர் 5 பூமி 6 ஈசுரன் 7 மாயை 8 பிரம்மம் 9 அவித்தை 10 ஜீவன் 11 உள்ளம் 12 மநம் 13 புத்தி 14 சித்தம் 15 அகங்காரம் 16 செவி 17 தொக்கு 18 கண் 19 நாக்கு 20 மூக்கு 21 வியானன் 22 பிராணன் 23 அபானன் 24 சமானன் 25 உதானன் 26 வாய் 27 கை 28 பாதம் 29 குதம் 30 குய்யம் 31 சர்மம் 32 உதிரம் 33 மாமிசம் 34 நரம்பு 35 எலும்பு 36 மஜ்ஜை



# கடவுள் தத்துவங்கள் விசாரணை.

| | | |
|---|---|---|
| 36 | சமஷ்டி ஸ்தூல சூக்ஷ்ம காரண பிரம்மம் | 1 முதல் 36 வரை |
| 32 | ஈசுர சமஷ்டி தத்துவங்கள் | 1—6 & 11—36 |
| 31 | ஜீவ ஸ்தூல சரீர வியவகாரத்திற்கு | 6—36 |
| 30 | ஈசுர சமஷ்டி சூக்ஷ்ம சரீர வியவகாரத்திற்கு | 1—30 |
| 29 | ஜீவன் தத்துவங்கள் | 8—36 |
| 28 | சகலரும் பிரதக்காக அனுபவிக்கப்படுபவை [இவை எதுவும் 'நான்' அல்ல மற்றே ஆத்மாவாம்] | 9—36 |
| 26 | ஜீவாத்மா-காரியசரீரம் | 11—36 |
| 25 | ஜீவ சூக்ஷ்ம சரீர வியவ காரத்திற்கு | 6—30 |
| 22 | இயந்திர வியவகாரத்திற்கு அதுவும் [பஞ்ச பூதங்களும் மற்ற ஞான கர்ம இயந்திரங்களும் தவிர மற்றவை எல்லாம்] | & 6—20 & 31—36 |
| 20 | சூக்ஷ்ம சரீர தத்துவங்கள் [ஞான-கிரியாசாதனம்] | 11—30 |
| 10 | ஞானசாதனம் அந்தக்கரணம் & ஞானேந்திரங்கள் | 11—15 & 20—25 |
| 10 | கிரியாசாதனம் [வாயுக்கள் & கர்மேந்திரியங்கள்] | 16—20 & 26—30 |
| 10 | மநோ ராச்சிய வியவகாரத்திற்கு | 6—15 |
| 8 | தனக்கந்நியமாக காணப்படுவது அக்ஞானத்தில் பிர்ம்மத்துடன் | 1— 8 |
| 7 | எப்போதும் தனக்கந்நியயாக காணப்படுவது | 1— 7 |
| 6 | சரீர [ஷட்கோச] தத்துவங்கள் | 31—36 |
| 5 | பஞ்ச பூதங்கள் [தன்மாத்திரைகள்] | 1— 5 |
| 5 | ஜீவ காரண சரீர வியவகாரத்திற்கு | 6—10 |
| 5 | அந்தக்கரணம் | 11—15 |
| 5 | வாயுக்கள் | 16—20 |
| 5 | ஞானேந்திரியம் | 21—25 |
| 5 | கர்மேந்தரியம் | 26—30 |
| 3 | ஈசுர காரண சரீர வியவகாரத்திற்கு | 6— 8 |
| 3 | ஜீவ காரண வியவகாரத்திற்கு | 8—10 |
| 3 | ஜீவ வியவகாத்திற்கு | 6+8+10 |
| 2 | ஈசுர வியவகாரத்திற்கு | 6+ 8 |
| 2 | சமஷ்டி ஜீவன் அவித்தை | 9+10 |
| 1 | எப்போதும் தானாகவே காணப்படும் சர்வ சாக்ஷி கடவுள், அதிட்டான சைதன்யம், அறிவு, பரமபுருஷர் எல்லாவற்றையும் கடந்தும் நிறைந்தும் தாங்கும் ஆத்மா | 8 |

# ஆத்ம விசாரணை

| | த்வைதம் | விஷிஸ்டாத் வைதம் | அத் வைதம் |
|---|---|---|---|
| சரீரம் | ஸ்தூலம் | சூக்ஷமம் | காரணம் |
| அவஸ்தை | ஜாக்கிரம் | ஸ்வப்னம் | சுழுத்தி |
| அபிமானி | விசுவன் | தைஜஸன் | பிராக்ஞன் |
| | சிதாபன் | ஜீவன் | கூடஸ்தன் |

| | | | |
|---|---|---|---|
| சரீரம் | விராட்டு | இரண்யகர்ப்பம் | அவ்யாகிருதம் |
| அவஸ்தை | ஸ்ருஷ்டி | ஸ்திதி | ஸம்ஹாரம் |
| அபிமானி | வைசுவாநரன் | சூத்ராத்மா | அந்தர்யாமி |

ஈசுரன்—————— காரியப் பிரஹ்மம் ——————

| | | | |
|---|---|---|---|
| சரீரம் | சத்ரூப சக்தி | சித்ரூப சக்தி | ஆனந்தரூப சக்தி |
| அவஸ்தை | சர்வ வியாபகம் | சர்வப் ப்ரகாசம் | சர்வானந்தம் |
| அபிமானி | பரிபூரணர் | தேஜோமயர் | பரமானந்தர் |

சச்சிதானந்தம் - காரணப் பிரஹ்மம் - அவித்தை மாயை

---

*திண்மை-அன்னமயம் பிருதிவி-கந்தம் போகிகள் அருளும் சதாசிவன்*
*குளிர்ச்சி-பிராணமயம் அப்பு-ரஸம் யோகிகள் மறைக்கும் ஈசானன்*
*உஷ்ணம்-மநோமயம் அக்கினி-ரூபம் அப்யாஸிகள் சம்ஹரிக்கும் ருத்திரன்*
*சலனம்-விஞ்ஞானமயம் காற்று-ஸ்பர்சம் கர்மநிஷ்டன் சிருஷ்டிக்கும் பிரமா*
*சூன்யம்-ஆனந்தமயம் ஆகாயம்-சப்தம் ஞானநிஷ்டன் இரக்ஷிக்கும் விஷ்ணு*

---

*பஞ்சகோசங்கள் பஞ்சபூதம் தன்மாத்திரை ஜீவன்சிதாபாஸன் ஈசுரன்சைதன்யம்*
*நான்அபிமானம் காரியசூக்ஷ்ம பூதங்கள் ஜீவகாரணசரீரம் ஈசுரகாரண சரீரம்*
*கடவுள்உணர்வைமறைத்தல் அற்பக்கருவாய் அநேகரூபமாய் சர்வஞ்யஉபாதி*
*ஆவரணசக்தி விசேஷபசக்தி அவித்தைகள் மாயை வித்தை*

---

*சுத்த தாமஸ குணம் சுத்த ராஜஸ குணம் சுத்த சத்துவ குணம்*
*விந்து தத்துவம் மூலப்பிருகிருதி மஹத் தத்துவம்*

---

*முக்குணம் கடந்த நிச்சலமான சுத்த சக்தி சுத்தப் பிரஹ்மம்*
*எப்போதும் எல்லாம் கடந்து நிறைந்து தாங்கும் பரப்பிரஹ்மம் கடவுள்*
*அகம் பிரம்மம் பிரம்மம் அகம் சர்வம் பிரம்மம்*

---



| பஞ்ச பூதங்கள் | தந்மாத்திரைகள் | | | | பஞ்சீகரணம் |
|---|---|---|---|---|---|
| 5 | ஆகாயம் | காற்று | அக்கினி | ஜலம் | பூமி |
| 1 சப்தம் | 1/2 | 1/8 | 1/8 | 1/8 | 1/8 |
| 1 ஸ்பர்சம் | 1/8 | 1/2 | 1/8 | 1/8 | 1/8 |
| 1 ரூபம் | 1/8 | 1/8 | 1/2 | 1/8 | 1/8 |
| 1 ரஸம் | 1/8 | 1/8 | 1/8 | 1/2 | 1/8 |
| 1 கந்தம் | 1/8 | 1/8 | 1/8 | 1/8 | 1/2 |
| *அந்தக் கரணம்* | *உள்ளம்* | *மனம்* | *புத்தி* | *சித்தம்* | *அகங்காரம்* |
| வாயுக்கள் | வியானன் | பிராணன் | அபானன் | சமானன் | உதானன் |
| ஞாநேந்திரம் | சுரோந்திரம் | துவக்கு | சட்சு | சிங்வை | ஆக்கிராணம் |
| கர்மேந்திரம் | வாக்கு | பாணி | பாதம் | பாயுறு | உபஸ்தம் |
| | செவி | மெய் | கண் | நாக்கு | மூக்கு |
| உணர்வு | சூன்யம் | சலனம் | உஷ்ணம் | குளிர்ச்சி | திண்மை |
| ஞாணி | சித்தர் | கந்தர்வர் | தேவர் | பிதிரர் | மனிதர் |

---

குரு மஹான் அப்யாஸியின் விசாரணையில் காணும் குறைகள் குற்றங்களை மன்னித்து திருந்தி உய்ய வழிகாட்டி அருள்புரிய பிரார்த்திக்கிறேன். ஆத்ம விசாரணை மிகவும் பரந்து விரிந்து ஆழம் காண இயலாதது. ஒவ்வொன்றின் இடையில் பலப்பல படித்தரங்கள் கொண்டது. குருமுகமாக சிஷ்யபாவத்தில் பல காலம் அப்யாஸித்து உணரவேண்டியது. குருமஹான்

## 6. திருவாசக உரை பக்கங்களில் சில பகுதி:

13 நல்லதொரு விதை முளைத்துப் பழமாகி நல்லுணவு ஆனது மன்றிப் பழையபடி நல்ல விதையாகவும் ஆயத்தமாயிருக்கிறது தீ எரிக்கச் சுள்ளியாகவும், தேனைக்கொடுத்ததும், உரமாகவும் செயல்படுகிறது. அகிலாண்டமெங்கும் ஈசன் செயல் இங்ஙனம் நடைபெற்று வருகிறது.

22 மனம், வாக்கு. காயம், ஆகிய திரிகரணங்களால் நிகழ்வன வெல்லாம் கர்மம். ஜீவாத்மன் மிக நுண்ணிய உயிராக ஸ்தாவரம், ஜங்கமம் ஆகிய பலகோடி பிறவிகளை எடுத்துப் பரிணமித்துப் பெருநிலையெய்துகிறது.

30 தேன் ஈ பலப்பல செடிகளில் உள்ள தோஷங்களைக் காண அவகாசமில்லாமல் பூவில் உள்ள தேனை மட்டும் சேகரிக்கிறது. ஆது போன்றவன் ஆத்ம சாதகன்.

67. கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, பிரம்மச் சரியம், அபரிசி, ரஹம் ஐம் பொறிகளைச் சிறுநெறி செல்லாது தடுத்தல் இயமம்; சாந்தமும் இனிமையும் செறிந்த மனநிலை, திரிகரணசுத்தி, பக்தி சிரத்தையோடு சாஸ்திர ஆராச்சி செய்தல் நேர்மை சுயநலத்தை பொது நலமாக்குதல் இவை நியமம்;

68. தேகத்தைத் திட்பமும், துப்புரவும் வாய்க்கப் பெற்ற தாக திருத்தியமைப்பது ஆஸனமும், பிராணயாமமும் ஆம்; புறவுலகில் போய்க்கொண்டிருந்த இந்திரியங்களைமீட்டெடுத்து அந்தர்முகமாகத் திருப்புவது பிரத்யாஹாரம்; ஐம்பொறிகளும் தன்னுள் மனதில் லயமாக்குதல் தாரணை முற்றிலும் தன்மய மாக்கப்பட்ட மனதைச் சீரிய லட்சியம் ஒன்றில் தைலதாரைப் போன்று தன்னுள் செலுத்துவது தியானம்; விறகுக்கட்டை தீயாகவடிவெடுப்பதுபோன்று பரமாத்மாவைத் தியானிக்கின்ற ஜீவாத்மன் பரமாத்மாவோடு ஒன்றுபடுகின்றுன் அது ஸமாதி;

71. பரமாத்மா மாயைக்கு ஈசுரன்; ஜீவாத்மா மாயைக்கு அடிமை; பிரகிருதியாலாகிய தேகத்தைத் திருத்தியமைப்பது பரிணமமாம் ஜீவாத்மன் மாயையினின்று விடுதலையடைந்து பிரமாத்மாவை சேர்வது நிரந்தரமாக தேகத்தைக் களைந்தெறி வது முக்தி. ஜகத்மித்தை; ஜீவன் பிரம்மமே.

79. ஸ்ரீ ராமன் பரமாத்ம தத்துவம்; சீதாபிராட்டி பரமாத்மனுக்குரிய ஜீவாந்தம் தத்துவம் இலங்கை வேந்த னுகிய இராவணன் ரஜோகுணம் நிறைந்த மனேதத்துவத்தின் அவதாரம். ஞானேந்திரம் ஐந்து ஆகியவற்றைப் பத்துத் தலை களாகக் கொண்டுள்ளது மனது. அந்தப் பொல்லாத மனது என்னும் அரக்கன் ஜீவாத்மன் என்னும் சீதையைச் சிறை பிடித்து வைத்துத் தனக்குறியதாக்க முயலுகிறுன். ஜீவாத் மனே பரமாத்மனிடம்போய்ச்சேரவேண்டுமென்று அருள்தாகம் எடுத்து அழுகிறது. ஆஞ்ஜனேயன் என்னும் குரு வந்து ஆறுதல் சொல்கிறுன். பின்பு இராமன் என்னும் ஈசனுடைய அருளுக்கும். இராவணன் என்னும் மனதினுடைய மருளுக்கும் இடையில் போராட்டம் வருகிறது. மனேநாசம் நிகழ்கிறது. மற்றபாத்தி ரங்கள் வாழ்வில் உள்ள வேவ்வேறு கூறுபாடுகளை விளக்குகிறது

80. தாய்ப்பறவையானது இரைதேடி யருந்தி அதை ஒருவாறு ஜீரணம் செய்த பிறகு தன் குஞ்சின் வாயில் அதைச் செலுத்துவதைப் போன்றதான புராணக் கதைகள் உடலில் தாய்ப்பால் பற்றுவது போன்று எளிதாக தத்துவ ஞானம் உள் ளத்தில் பதிகிறது.



82. ஸாதனத்தில் மேலோங்கும்போது தெய்வம் ஒன்று; அதற்குப் பெயர்கள் பல என்னும் உண்மையை அறிகிறுன்.

116 கண் அமைப்பிலும் சூரிய அமைப்பிலும் ஒளி தத்துவம் புதைந்திருந்து இரண்டுக்கும் பொதுவாயிருப்பது அருளுக்கு நிகர்; சுவை என்னும் அருள்நிலை சக்கரைக்கும் நாவிற்கும் பொதுவானது; இல்லையேல் சர்க்கரையை நா ஒரு பொழுதும் சுவைக்காது பூதங்களின் தன்மாத்திரிரைகளாகிய சப்தம் ஸ்பர் சம் ரூபம் ரஸம் கந்தம் உயிர்களிடத்துப் பொறிகளில் அமைந் திருப்பது போன்று ஜீவ தத்துவத்தில் ஈசுர தத்துவமும் நிறைந் திருக்கிறது அருள் ஆகும்.

127. ஜீவாத்மனுக்கு தனிசைதன்யமில்லை. ஈசுர சைதன யமே ஜீவ சைதன்யமாக ஒளிர்கிறது. இன்பம் யாண்டும் சைதன்யத்துக்கு உரியது.

147. மெய் ஞானத்தைத் திரிவுபடுத்தும் தன்மை பொறி களுக்கு உண்டு. அப்பொறிகளுக்கு உறைவிடம் இவ்வுடல்.

156. பஞ்சேந்திரங்கள் மூலம் நுகரப்படும் பொழுது அது பிரபஞ்சம் எனப்படுகிறது. ஞானதிருஷ்டியில் காணும் பொழுது அது கடவுள் எனப்படுகிறது.

170. தனியாக களி மண்ணில் பாண்டம் வனைய முடி யாது, களிமண்ணை நீரில் பிசைய வேண்டும்; அந்த நீருக்கு நிகரானது இறைவனுடைய கருணை என்னும் சக்தி. சப்தப் பிரம மம் இடையருது ஒலித்துக் கொண்டிருக்கிறது, அழுக்கை உபா தியென்று கூறுவது வேதாந்தக் கோட்பாடு ஆகும். நீர் ஆனது அலை நுரை திவலைகளாக வடிவெடுப்பது உபாதிகளாகும். ஆத்மாவானது எண்ணிறந்த ஜீவ விகாரங்களை எடுப்பது அதன் உபாதியாகும்.

174. மின் சங்கு, மின் விசிரி, மின் விளக்கு, தனுப்பை உண்டு பண்ணும் மின் சாதனம் இவை யாவற்றுக்கும் மூல சக்தி யாயிருப்பது மின் சக்தி. ஆத்ம சக்திகளெல்லாம் பரமேஸ்வரன் இடமிருந்து வந்துள்ள சக்திகளாம்.

202. பஞ்ச கிருத்தியங்களில் (படைத்தல், காத்தல், துடைத்தல் மறைத்தல், அருளல்) ஈடுபட்டிருப்பது சக்தி; கிருத் தியங்களையெல்லாம் கடந்த நிலையில் இருப்பது சிவம், அலை கடல், ஆழ்கடல் போன்று ஆந்ம சாதகன் சக்தியின் துணை கொண்டு சிவத்தை அடைகிறுன்.

217. முறை தவறிய வழிபாடு அருளைப்பெருமல் அகங்காரத்தை வளர்க்கிறது.

269. சஞ்சரிக்கின்ற வாயுவும், தீயும், நீரும், மண்ணும் ஆகாயமும் ஒடுங்கும் காலதேவதையும் மாயாசக்தியின் கூறு ஆகிறது. சிவபெருமான் காலகாலன்.

284. பற்றுதல் ராகம் பற்றற்ற விராகம் அல்லது, வைராக்கியம். பொருள் ஆசை பாழ்படுத்துகிறது. அருள்ஆசை மேலும் மேலும் உய்விக்கிறது.

312. தைலதாரை போன்று யாருடைய மனது ஈசுர சன்னதிக்குப் போகிறதோ அவன் முனி எனப்படுகிருன். யோகம் வாய்க்கவும் வழுவவும் வல்லது. ஆரம்ப தசையில் புல னடக்கத்தின் தரத்திற்கு ஏற்ப சாதகன் யோகத்தில் முன்னேற வும் பின் வாங்கவும் செய்கிருன்.

320. எள்ளில் எண்ணெய், தயிரில் வெண்ணெய் ஊற்றில் நீர், மரக்கட்டையில் தீ போன்று உபாதிகளோடு கூடிய ஜீவாத்மனை முன்னனியில் வைத்துப் பார்க்குமிடத்துப் பரமாத்மன் அந்தராத்துமாவாக மறைந்திருக்கின்ருன் ஜீவஉபாதிகளை அகற்றுங்கால் ஜீவாத்மன் பரமாத்துமாவில் ஒன்றுபடுகிருன்.

323. நிலம், நீர், நெருப்பு, வாயு, ஆகாசம், மனம், புத்தி அகங்காரம் ஆகிய இந்த எட்டு ஜடவஸ்துகளும் ஈசனுடைய அஷ்டமூர்த்தி தத்துவ சொரூபங்களாகும். பிரகிருதி புருஷன் அல்லது சக்தி-சிவம் ஆகிய இரண்டு தத்துவங்களின் கூட்டுறவு அர்த்தநாரீசுவரன் எனப்படுகிறது. உடல் அம்பிகையின் சொரூபம். உயிர் சிவ சொரூபம். இவையிரண்டும் பிரிந்தால் வாழ்வு நடைபெருது. இவைகளை அறியாதவன் அவனுடைய சூக்ஷ்மநிலை, காரணநிலை, அதீதநிலை, அகண்டநிலை அறிய மாட்டான்.

328. பூர்வ ஜன்மாந்தர வாசனையானது ஜீவனைப் போகத்தில் தூண்டுகிறது. ஆனல் யோகத்தின் சிறப்பை அறிந்து கொண்டவன் போகம் வேண்டாம் என்று தனது சிற்றியில்புக்கு உபதேசிக்கிருன் இது அனுபோக சுத்தியாகிறது

331. உடல் உணர்வு படைத்திருப்பது கீழான நிலை. பிரேமை பக்தியை வேண்டிய கோபிமார்களுக்கு இன்னும் பக்குவமாகவில்லை. எனவே நீராடிக்கொண்டிருந்த கோபிமார் களுடைய துகில்களை மரத்தின் மீது எடுத்து வைத்து அவர் களுக்கு தேகாத்ம புத்தி இருந்ததென்று நிருபித்துக்காட்டினன்



340. மேல்நிலைக்குப் போவதற்குத் துன்பமும் ஒரு தூண்டு கோலாயிருக்கிறது. ஜீவாத்மனுக்கு ஒவ்வொரு இன்பத்திலும் துன்பம் கலந்தே இருக்கிறது. ஜகத், ஜீவன் பரம் ஆகிய முப் பொருளும் மெய்ப்பொருள்களாம், துவைத நிலை, ஜீவாத்மன் தன்னை பரமாத்மாவின் பிம்பம் என உணர்கிருன், விசிஷ்டாத் வைத நிலை. இறுதியில் அவன் பரமாத்மாவில் லயமாகிருன், அது அத்வைத நிலை.

347. கடவுள் உலகைக் கடந்தும் இருக்கிருர்; உலகில் ஊடுருவியும் இருக்கிருர். அந்த அதீத நிலையில் அவர் பரி பூரணராய் இருக்கிருர். பின்பு அவர் இப்பிரபஞ்சமாயும் இதில் உள்ள அனைத்துமாயும் வந்துள்ளார். பூரணத்திலிருந்து பூர ணம் வந்திருந்தும் பூரணமே யாண்டும் உளது. பால் தயிராக பரிணமிப்பது போன்று பரப்பொருள் பிரபஞ்சமாகப் பரிணமித் திருக்கிருர் என்பது துவைதம். கயிறு பாம்பாகத் தென்பட்டுக் கொண்டிருப்பது போன்று பரம்பொருள் பிரபஞ்சமாகத் தென் படுகிருர் என்பது விசிஷ்டாத்வைதம், அத்வைதம் இரண்டுக் கும் பொது. பூரணப்பொருளில் எந்தவிதமான மாறுதலும் எப் போதுமே உண்டாவதில்லை என்பது சுத்த அத்வைதம். புலப் படுகிற பிரபஞ்சத்தில் பூரணத்தைக் காணமுயலுபவன் நல்ல ஆத்மசாதகன். பூரணத்தை அதனுள் காண்பவன் ஞானி. பூர ணத்திலேயே புதைந்திருப்பவன் நிறை ஞானி. உள்ளது ஒன்று அது ஜடப்பொருள்களாகவும், எண்ணிறந்த ஜீவர்களாகவும் இலங்குகிறது என அதை உணர்பவது விசுவரூபதரிசனமாகும்.

353. பிரகிருதியின் மூலமாகப் பிரதிபலிக்கும் ஆனந்தம் தங்கு தடையுடையது. அது நிலைத்திருப்பதில்லை, அதனல் சிற்றின்பம் எனப்படுகிறது. பிரகிருதியோடு சம்பந்தப்படாத ஆனந்தமோ நிரந்தரமானது.

368 சீலத்தினின்று உண்டாகிற உடல்பொலிவு தேஜஸ்; துணிந்து நலனையே செய்வது வீரியம்; உடல் வலிவு பலம்; சீலத்தினின்று உண்டாகிற உள் ஒளி ஓஜஸ். யாருக்கும் தீங்கு செய்யாமலிருந்து வருகிற கஷ்டங்களை பொறுத்தல் சகிப்பு.

377. கடலில் உள்ள அலைகளின் மீது ஒரு சூரியன் பல சூரியர்களாகப் பிரதி விம்பிப்பதுபோன்று குணபேதத்தை யுடைய பிரகிருதியின்மீது பரமாத்மாவானவர் பலகோடி ஜீவர் களாகப் பிரதி பிம்பிக்கிருர். ஆதலால்தான் ஜீவாத்மாவுக்குச் சிதாபாசன் என்னும் பெயர் வந்தது. பிரதி பிம்பிக்கிற சைதன் யம் என்பது அதன் பொருள்.

---

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

---

உ

ஸ்ரீ பரப் பிரஹ்மனே நம:

ஓம் விக்னேஸாய நம:! ஓம் கணபதயே நம:!!
ஓம் ஸ்ரீம் கிலீம் க்லௌன் கம் கணபதயே
வரவரத சர்வ ஜனம் மே வசமான ஸ்வாஹா [காணபத்யம்]

சு ப் ர ம ண் ய ம் ! ச ர வ ண ப வ !! [கௌமாரம்]

ந ம சி வ ா ய ! சி வ ா ய ந ம !! சி வ ா ய சி வ !!! [சைவம்]

சௌ ஔ ஹௌ க்ரீம் கௌ ஐ இரீம் சிரீம் க்லீம்
சர்வ மங்கல மாங்கல்யே சிவே சர்வார்த்த சாதிகே
சரண்யே த்ரயம்பகே கௌரி நாராயணி நமோஸ்துதே(சாக்தம்)

ஓம் நமோ நாராயணாய! ஸ்ரீ ராம: நமோஸ்துதே
ஓம் நமோ பகவதே கிருஷ்ணாய வாசுதேவாய கோபிகாலோல
அம் உம் சௌம் ஸ்ரீ விஷ்ணு வஜ்ரதிலக
ஸ்ரீ ஹரி க்லீம் வசி வசி வசி ஸ்வாஹாஹா [வைஷ்ணவர்]

ஓம் [ப்ரணவம் கடவுளைக் குறிக்கிறது] [சௌரம்]

பூர்ப்புவஸ்ஸுவ [வ்யாஹ்ருதியும் அண்டங்கள் வடிவிலுள்ள கடவுள்]
தத்ஸ விதூர் வரேண்யம் [அப்படிப்பட்ட அண்டகோடி மிகவும் உயரந்ததான]
பர்கோ தேவஸ்ய தீமஹி [தேவர்க்கெல்லாம் கடவுளை தியானம் செய்கிறேன்]
த்யோ யோ ந: ப்ரசோதயாத் [அறிவாய் புத்தியாய் எண்ணங்களாய் இருப்பவர் எவரோ அவரே நம்முள் இருக்கும் அறிவை தூண்டுவித்து பிரகாசிக்கச்செய்கிறார்] [காயத்ரீ]

பிரஹ்மமே மாம் மதுமே மாம் ப்ரஹ்மமேவ மதுமே மாம்
அகம் பிரம்மம் பிரம்மம் அகம் சர்வம் பிரம்மம் [அத்வைதம்]

யத் பத்ரம் தன் ம ஆஸுவ [எது உயர்ந்த நன்மையோ அதை அருள்வாயாக]

நான்மறை ஆறங்கம் முதலியவை யாவும் கற்றுக் கேள்வி ஞானத்திலும் மிகுந்த சனகாதி நால்வருக்கும் தட்சிணாமூர்த்தியே உபதேசித்தும் ஐயம் அகலவில்லை. சிவபெருமான் உண்மை உணரும் மனமற்ற சமாதி நிலையில் தாமிருந்து அவர்களையும் இருத்திக் காட்ட விரும்பி, சின்முத்திரைக் காட்டி கண் மூடினர். சனகாதியரும் கண் மூடினர், மெய்யுணர்ந்தோர் ஆயினர். மனம் செயலற்ற நிலையில், உலகை உணரும் மனம் புத்தியைக் கடந்து, அறிவேயாகிய ஆத்மா தன்னைத் தன்னுள் அறிகிறது. ஆத்மாவை தன்னுள் நேரே அறிவது கண்ட (அபரோக்ஷ) ஞானம். அதுவே ஆத்ம பிரஹ்ம ஞானம்.




அக்ஷய ஆண்டு பங்குனி மீ 24 உ (7—4—87) மணிவிழா

நிற்போர் :

திருமதி T. மல்லிகா தங்கராஜ்,
திரு R தங்கராஜ், திரு. R. பிரகாஷ்,
திரு. R. வெங்கடேஷ், திருமதி V. ரத்னா வெங்கடேஷ்

உட்கார்ந்து இருப்போர் :

திருமதி R. ஜெயலக்ஷ்மி ராமநாதன்,
செல்வி R. V. சம்பூரணிலக்ஷ்மி, திரு R. T. P. ராமநாதன்
436, சேலம் மெயின் ரோடு, கொமாரபாளையம் - 638183.

கண்ணி ரண்டும் ராமனைக் காணவே
காதி ரண்டும் ராமனைக் கேட்கவே
வாய்ப் பண்இசையும் ராமனைப் பாடவே
பாத மிரண்டும் ராமனை நாடவே
கை யிரண்டும் ராமனைச் சேவிக்கவே
எண்ணி எண்ணி ராமனை நேசிப்போம்
இதய பூவால் ராமனைப் பூஜிப்போம்
ஓம்ராம் ஸ்ரீராம் ஜெயராம் ஜெயஜெயராம்




அன்னை அன்னை அன்னை அன்பினுக்கு மங்களம்
ஆதிசக்தி அம்பிகைக் கனந்த கோடி மங்களம்
என்னுள்ளே விளங்கும் எங்கள் ஈஸ்வரிக்கு மங்களம்
இச்சை யாவும் முற்றுவிக்கும் சிற்சபைக்கு மங்களம்.

பூர்ணா பிரிண்டர்ஸ், கொமாரபாளையம். போன்: 3437